# ஸ்ரீ குமரகுருபரர்

தொகுதி-2. சித்திரை பகுதி-7

## விடையரங்கம் எங்கே?

திருப்பதி கோயில் பற்றிய ஒரு வினவுக்குப் பல அறிஞர்கள் தந்த விடைகள் சென்ற இதழில் வெளியிட்டதைப் பல அன்பர்கள் நேரிலும் கடிதம் வாயிலாகவும் பாராட்டி உற்சாகப் படுத்தியுள்ளார்கள். அவரவர்கள் கருத்துக்களையும் தெரிவித்துள்ளார்கள். அப்பகுதியில் இன்னும் கொஞ்சம் புதுமை செய்ய விரும்பி இவ்விதழில் விடையரங்கத்தை வெளியிடவில்லை. அடுத்த இதழில் விடையரங்கத்தில் வரவுள்ள வினா கீழே உள்ளது. வாசகர்கள் விடையெழுதலாம். தக்கன அறிஞர் பெருமக்களின் விடைகளுடன் சேர்த்து வெளியிடப் பெறும்.

சிவனுக்கும் சீவனுக்கும் உள்ள ஐந்து ஒப்புமைகள் யாவை? அவ்வொப்புமைகளுள்ளும் சிவம் ஓங்கிநிற்கும் நுணுக்கம்எவ்வாறு? இவ் ஐயங்களுக்கு ஸ்ரீலஸ்ரீ காசிவாசி எஜமான் சுவாமிகள் அவர்கள் அருள் பழுத்த கனிச்சுவை வாயிலாகத் தெளிவு செய்தருளியுள்ளார்கள். பண்டார மும்மணிக்கோவையில் உள்ள 'ஒன்றே தன்மை' எனத் தொடங்கும் பாடலின் ஞானரகசியத்தை வெளிப்படுத்தி யருளியுள்ளார்கள்என்றேசொல்லலாம்,

பிறக்கும் புத்[illegible]ாகிய ரௌத்திரியின் பொ[illegible]ன்கள் வருடப்பிறப்பின் [illegible]க்கள் ஆகியவற்றை ஜோதிஷம் திரு. A. இராஜமாணிக்கம் அவர்கள் கட்டுரையாகத் தந்துள்ளார்.

காசிக்கலம்பகத்துள் 'முத்தாடி' எனத்தொடங்கும் பாடலுக்கும், மதுரைக் கலம்பகத்துள் 'வாணிலாப் பரப்பு' எனத் தொடங்கும் பாடலுக்கும் ஒரு கருத்து உறவு உண்டு. அதனை, அந்த இலக்கிய சுகத்தை நெல்லை சிவமணி புலவர் திரு. ம. சிவசம்பு பி. லிட்., அவர்கள் கருத்தோவியமாகத் தந்துள்ளார். கட்டுரைத் தலைப்பு பரமசினும் பட்சபாதமும்.

அருச்சுனனின் பத்துப் பெயர்கள் யாவை எனறு ஆய்ந்து கண்டு அறிவிக்கிறார் திருக்கோயில் ஆசிரியர் திரு. ந. ரா. முருகவேள் எம். ஏ., அவர்கள். பெயர்கள் பத்துடைய மன்னவன் என்பது அக்கட்டுரையின் தலைப்பு.

திரு. கி. வா. ஜ. அவர்கள் திருவாரூர் நான்மணிமாலை விளக்கமாக மூன்று பரிவட்டங்கள் என்ற கட்டுரை எழுதியுள்ளார்.

மகாவித்துவான் திரு. ச. தண்டபாணி தேசிகர் அவர்கள் மீனாட்சி அம்மை பிள்ளைத்தமிழ் ஒன்பதாம் பாடலில் செவிலி அம்புலியை மிரட்டுகின்ற நயங்களை வரைந்துள்ளார்கள்.

மற்றும் ஏற்றுமதி, இறக்குமதி, தலயாத்திரை திருக்களிற்றுப்படியார் தெளிவுரை ஆகியவையும் இந்த இதழுக்கு அணி செய்கின்றன.

நி. ஆ-ர்.

**அடுத்த விடையரங்கிற்கு வினா:**

ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் முருகன் அருளால் ஊமை நீங்கப் பெற்றவர். அவர் முருகனையே குருவாகக் கொள்ளலாம். ஸ்ரீ மாசிலாமணி தேசிகரை நாடியதேன் ?

உ
சிவ சிவ

சுசீந்திரத்தில் ஸ்ரீ தாணுமாலயசுவாமி தேவஸ்தானத்தில்

# சித்திரைத் திருவிழா தேவார கோஷ்டி

கன்னியாகுமரி ஆச்சிராமம் திருப்பனந்தாள்.

திருமுறை அன்னம்பாலிப்பு வகையரு நிதியின்படி

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர்

ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள்

அவர்களின் அருளாணையின் வண்ணம் நடத்தப்பெறுவது

27—4—80 முதல் 29—4—80 முடிய

திருமுறைவாணர்கள்:—

1. தேவார இசைமணி
திரு. S. முத்துக்கந்தசாமி தேசிகர்,
ஸ்ரீ காசிமடம் கட்டளை ஓதுவார், திருச்சிராப்பள்ளி.

2. திரு. குமாரசாமி ஓதுவார்,
திருமுறைப்பணி, பழனி.

௩. திரு. T. தம்பையா ஓதுவார்,
ஸ்ரீ காசிமடம் கட்டளை ஓதுவார், சுசீந்திரம்.

4. திரு. C. கோதண்டபாணி,
வேய்ங்குழல், நாகர்கோயில்.

5. திரு. K. பகவதிபெருமாள் பிள்ளை,
மிருதங்கம், நாகர்கோயில்.

உத்திரவுப்படி,
பா. கனகசபாபதி பிள்ளை,
ஏஜண்டு, ஸ்ரீ காசிமடம், ஆச்சிராமம்.

---

குறிப்பு:- மேற்படி ஓதுவார்கள் 30—4—80 உ கன்னியாகுமரி அருள்மிகு பகவதியம்மன் கோயிலில்திருமுறைப்பணி செய்வார்கள்.

பூங்கொன்றைக் கண்ணியான் பொன்மன் றிறைஞ்சிடுக
ஆங்கொன்றைக் கண்ணி யவர்.



# அருள்பழுத்த கனிச்சுவை

ஐந்து காரணங்களால் சீவனும் சிவனும் சமம் என்று ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் அருளியுள்ளார்கள். சீவனும் சிவனும் சமம் என்பதற்கு மேற்கொண்டு ஆறுவதாக காரணமும் சொல்ல முடியும். அதனை இந்தப் பாடலின் 17-18 ஆம்அடிகளில்எடுத்துக்கூறி மறுக்கிறார்கள். அவ்வகையில் இந்த ஐந்து காரணங்களேயும் கூட அலங்காரமாக - தன்னடக்கமாகப் பொருள் கொண்டது என்றே கூற வேண்டியுள்ளது.

'ஒன்றே தன்மை உனக்கும் மற்று எமக்கும்' என்பதற்குக் கூறிய முதற்காரணத்தைப் பார்ப்போம்.

'எஞ்ஞான்று உளே, உளம் அஞ்ஞான்று யாமே'

இது முதல் காரணம். சிவம் அநாதியானது; சீவனும் அநாதியானது. அநாதி என்றால் தோற்றம் அற்றது; தோற்றத்தைக் கணிக்க இயலாதது என்பது பொருள். 'எஞ்ஞான்று உளே, உளம் அஞ்ஞான்று யாமே' என்றால் 'சிவனே! உன்னுடைய தோற்றம் என்றோ அன்றே எங்களுடைய தோற்றமும்' என்பது பொருள். "உனக்குத் தோற்றம் குறிப்பிட இயலாது; எமக்கும் அவ்வாறே" என்பது கருத்து. ஆதி அந்தம் என்னும் இரண்டையும் கூறுவதுதான் வழக்கம். அதாவது தோற்றம் முடிவு இரண்டையும் சொல்ல வேண்டும். சுவாமிகள் இங்கு தோற்றமில்லை என்பதில் மட்டும் ஒற்றுமை கூறியதனால் அந்தத்தில் சீவனுக்கும் சிவனுக்கும் ஒரு வேற்றுமை இருப்பதனை நயமாக உணர்த்துகிறார்கள். இறுதியில் சீவன் சிவத்துள் ஒடுங்குவது. இப்படி ஒன்று கூறி மற்றொரு வகையில் ஒப்புமை இன்மையை

உணர வைத்த நயத்தால் சுவாமிகளின் தன்னடக்கம் புலனாகிறது.

இரண்டாவது காரணம்,

**'அழியா நிலைமையை அனையம் யாமே'**

என்பது. இரண்டுக்கும் அழிவில்லை என்பது ஒப்புமை. ஆயினும் முன்பு கூறியதுபோல் சீவன் சிவத்துக்குள் ஒடுங்குதல் குறிப்பு.

இனி மூன்றும் காரணத்தைப் பார்ப்போம்

**'வியாபகம் நினக்குளது யாமும் அஃது உளமே'**

என்பது அது.

வியாபகம் என்ற சொல்லுக்கு இயக்கம் என்பது பொருள். சிவமும் எங்கும் எதனூடும் இயங்குவது. சீவனும் எங்கும் இயங்கவல்லது. முன் காரணத்தில் 'அனையம் யாமே' என்று தேற்றே காரத்துடன் அறிவித்த சுவாமிகள் இக் காரணம் கூறும்போது 'யாமும்' என்று கூறியதைச் சிந்திக்க வேண்டும். எங்களுக்குக் கூட வியாபகம் உண்டு என்று பொருள்படுகிறது. யாமும் என்பதனை இழிவு: சிறப்பும்மை யாகக் கொள்ள வேண்டும்.

ஒரு ரூபாய் கையிலே வைத்திருப்பவனும் 'நான் பணம் வைத்துக் கொண்டுள்ளேன்' என்று கூறிக்கொள்ள உரிமை உடையவன்; ஒரு கோடி ரூபாய் வைத்திருப்பவனும் அப்படிச் சொல்லிக் கொள்ளலாம்.

சிவனுக்கு உள்ள வியாபகம் சர்வவியாபகம் ; கட்டற்ற நிலையில் அமைந்த வியாபகம்! சீவனுக்குக் கட்டுள்ளநிலையில் அமைந்த வியாபகம். 'யாமும்' என்பதில் உம்மையினால் சுவாமிகள் இந்த ரகசியத்தை அறிவிக்கிறார்கள்.

அடுத்து நான்காவது காரணத்தைப் பார்ப்போம்.

**'அறிவெனப் பெயரிய பெயரினை; அப்பெயர்**
**பிறிவரும் பெயரெனப் பெற்றனம் யாமே'**

என்பது அக்காரணம். 'ஞானஸ்வரூபி' என்று வேதங்கள் அவனை விளிக்கின்றன. கடவுள் பேரறிவு வடிவானவன் என்பதில் கருத்து வேறுபாடில்லை; சீவனும் அறிவுடையது. இக்கருத்தை அறிவிக்கும் இவ்விரண்டு அடிகளில் 'பிறி வரும் பெயர்' என வருவதைச் சிந்திக்க வேண்டும். 'பிறிவு

அரும்' என்பதனுல் அறிவு வேறு சீவன் வேறு என்பதை உணரலாம். என்னைவிட்டுக் கொடைக்குணம் பிறியாது என்ருல் கொடைக்குணம் வேறு இவன்வேறு என்பது தானே பொருள்.

தமிழ் அகராதியில் பிரிவு என்று ஒரு வார்த்தையும் பிறிவு என்று ஒரு வார்த்தையும் உண்டு. இங்கு சுவாமிகள் கையாளுவது இரண்டாவது வார்த்தையைத்தான்.

பிரிவு என்பது கூடி நீங்குதல்; பிறிவு என்பது வேறு பட்டு நீங்குதல். பிறிதாதல் என்பதே இப்பிறிவு. இவ் வகையில் அறிவு வேறு ஜீவன் வேறு என்ற நுணுக்கத்தை சுவாமிகள் உணர்த்துகிருர்கள். ஆனுல் தனித்தனி என்பது அதற்குப் பொருளல்ல.

சிவனின் அறிவு துலக்க வேண்டாதது; சீவனின் அறிவு துலக்க வேண்டியது; தூசுபடிந்த மாணிக்கக் கல்லைத் துடைத்து வைப்பதைப்போல. அஞ்ஞானத் தூசுப்படலம் சீவனின் அறிவில் படிய வாய்ப்பு உண்டு.

பிறிவரும் என்பதனுல் இவ்வேறுபாடுகளை சுவாமிகள் உணரவைக்கிருர்கள். ஆக மூன்ருவது காரணத்திலேயும் மேலோட்டமாக ஒப்புமையும் குறிப்பால் சீவனின் குறை வையும் உணர்த்தியருளினுர்கள்.

நாம் இனிப்பார்க்கவேண்டியது ஐந்தாவது காரணத்தை.

**'இச்சா ஞானக் கிரியைஎனறு இசைக்கும்**
**சக்திகள் உளைஉளது அத்திறம் எமக்கே'**

இச்சாசக்தி, ஞானசக்தி, கிரியாசக்தி என்ற மூன்றும் சிவத் தொடு நின்று இயங்கி இயக்குவன. விடுப்பு, அறிதல், செயல் என்ற இவற்றை ஏகதேசமாக மொழி பெயர்க்க லாம். இந்த மூன்றும் சிவனுக்கும் உண்டு, சீவனுக்கும் உண்டு. சிவன் ஏவும் சக்திகள் தன்வரையில் சீவனுக்கு இவை அமைகின்றன. இதிலும் ஞானம் சீவனுக்கு முற்றறி வாகவும் சீவன்க்குச் சிற்றறிவாகவும் அமைகிரது.

சிவமே அனைத்துக்கும் மேலானது என்ற தத்துவத்தை உள்வைத்து சீவனேடு ஒப்புமை செய்து சுவாமிகள் இவ் வைந்து காரணங்களையும் அருளுகுருர்கள், — **சிவ சிவ**

உ

சிவ சிவ

# மதுரையில்

# திருவிளையாடற் புராண பிரசங்க நிதி

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர்

**ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்**

அருளாணையின் வண்ணம்

நடத்தப் பெறுவது.

ரௌத்திரி ஸு சித்திரை மீ 2-ம்தேதிமுதல் 26-ம்தேதிமுடிய

(14—4—80 முதல் 7—5—80 முடிய)

24 பிரசங்கங்கள்

இடம்:— தருமை ஆதீனம் ஸ்ரீ குருஞானசம்பந்தர் திருமடம்,
397, வடக்கு மாசிவீதி, மதுரை.

மகாவித்துவான் திரு. **ச. தண்டபாணி தேசிகர்** அவர்கள்

14—4—80 முதல் 21—4—80 வரை

திருவிளையாடற் புராணம் — மதுரைக் காண்டம் பற்றியும்,

திரு. **க. வச்சிரவேல் முதலியார்** பி.ஏ., பி.டி., அவர்கள்

22—4—80முதல் 29—4—80வரை

திருவிளையாடற் புராணம் — கூடல் காண்டம் பற்றியும்,

மதுரை நகரவை உயர்நிலைப்பள்ளித் தமிழாசிரியர்,

வித்துவான் திரு. **தா. குருசாமி** அவர்கள்

30—4—80 முதல் 7—5—80 வரை

திருவிளையாடற் புராணம் — திருவாலவாய்க் காண்டம் பற்றியும்,

நாடோறும் மாலை 7-மணி முதல் 9-மணி வரை

விரிவுரை நிகழ்த்துவர்.

ஆணைப்படி,

திருப்பனந்தாள்,
22—3—80.

**முத்து. மெய்கண்டதேவன்,**
மானேசர், ஸ்ரீ காசிமடம்.

# இறக்குமதி

டௌவின் அடிச்சுவட்டில்

தமிழாக்கம்: **கோ. வன்மீகநாதன்**

## 16. சாசுவதமான சட்டத்தை அறிதல்.

செயற்படுதலின்றி சிவனே என்றிருக்கும் நிலையை
மிக உச்ச அளவுக்கு எய்துக;
அமைதியுடைமையின் அடித்தளத்தை இறுகப் பற்றுக.
எண்ணிறந்த பொருள்கள் உருப்பெற்று
இயக்கமுற எழுகின்றன,
ஆனால் அவை மீண்டும் தம் பழைய சயன நிலைக்கு
வீழ்வதைப் பார்த்துக் கொண்டிருக்கிறேன்,
செடிகொடிகள் செழித்து வளர்ந்தும் கூட
அவைஎங்கிருந்து வேரூன்றி எழும்பினவோ
அதே இடத்திற்கு (மடியத்) திரும்புவதைப் போல.
எங்கிருந்து வேர்விட்டு கிளம்பினவோ அதே மண்ணுக்குத்திரும்புதல்
சயன நிலையெனப்படும்,
இது தனக்கு விதிக்கப்பட்ட நிலைக்குத்[1] திரும்பிச் செல்லுதல்
எனப்படும்
தனக்கு விதிக்கப்பட்ட நிலைக்குத் திரும்பிச் செல்வதே
சாசுவத சட்டத்தைக் கண்டு கொள்ளல் ஆகும்.
சாசுவத சட்டத்தை அறிதல்தான் ஞானவொளி[2] பெறுதலாகும்.
சாசுவத சட்டத்தை அறியாமை
பேரிடுக்கணை முன்சென்று நாடுதலாகும்.
சாசுவத சட்டத்தை அறிந்தவன் பிறர் குற்றங்குறைகளைச்
சகித்துக் கொள்பவனாயிருப்பான்,[3]
அவ்வண்ணம் சகித்துக் கொள்பவனாயிருப்பதால்,
அவன் பாரபக்ஷம் இல்லாதவனாயிருக்கிறான்,
பாரபக்ஷமின்மையால் அவன் இறைமாட்சியுடையவனாயிருக்கிறான்,
இறைமாட்சி உடையனாயிருப்பதால்
அவன் இயற்கையோடு ஒத்துப்போகிறான்
(அத்துடன் பிணங்குவதோ, இகல்வதோ இல்லை).
இயற்கையுடன் ஒத்துப் போகிறவனாயிருப்பதால்,
அவன் பரபிரமத்துடன் ஒத்துப்போகிறான்,
(இணங்கி நடந்து கொள்கிறான்)
பரபிரமத்துடன் இணங்கி நடந்து கொள்வதால்
அவன் சாசுவதமாயிருக்கிறான்
அவனுடைய வாழ்க்கை முழுவதும் தீங்கிலிருந்து பாதுகாக்கப்
படுகிறது.

---

1. விதிக்கப்பட்ட நிலை — மூலத்தில் Destiny என்றிருக்கிறது.
2. ஞானவொளி பெறுதல் — மூலத்தில் Enlightenment என்றிருக்கிறது.
3. சகித்துக் கொள்பவனாயிருக்கிறான் — மூலத்தில் is to lerant என்றிருக்கிறது.

## 17. ஆள்பவர்கள் [1]

தலைசிறந்த ஆள்பவர்களைப்பற்றி
மக்கள் அப்படிப்பட்டவர்கள் இருக்கிறார்கள் என்று மட்டுமே
அறிவார்கள் ;
அவர்களுக்கு அடுத்தபடியான சிறந்தவர்களை மக்கள்
நேசித்துப் போற்றுகிறார்கள் ;
அவர்களுக்கு அடுத்தபடியானவர்களை மக்கள் அஞ்சுகிறார்கள்
அவர்களுக்கு அடுத்தபடியானவர்களை மக்கள் தூற்றுகிறார்கள்.
இவர்கள் மக்களுடைய நம்பிக்கையைப் பெறாவிட்டால்
சில மக்கள் இவர்களிடம் நம்பிக்கையை இழப்பார்கள்,
பிறகு இவர்களைச் சபிக்கத் தொடங்கி விடுகிறார்கள்.
ஆனால் தலைசிறந்தவர்களைப் பொறுத்தவரையில்
அவர்களுடைய கடமை நிறைவேறியவுடன்,
அவர்களுடைய வேலை முடிந்தவுடன்
மக்கள் எல்லோரும் கூறுவார்கள் :
" நாங்கள்தான் அக்காரியத்தைச் செய்தோம்" என்று.

## 18. டௌவின் (பரபிரமத்தின்) நலிவு.

மாபெரும் டௌ நலிவுற்றதும்
" மனிதாபிமானம் ", "நீதி" என்ற கொள்கைகள்
தலையெடுத்தன.
அறிவு வளர்ச்சியும் கெட்டிக்காரத்தனமும் தோன்றியதும்
அவற்றைத் தொடர்ந்து பெரும் ஆஷாடபூதித்தனமும்
உள்ளொன்றுவைத்துப் புறம்பொன்று கூறலும் வந்தது.
ஆறுவகை உறவுகள் தம்முள் ஒற்றுமையுடன் அமைதியாக
வாழாது போனதும் "அன்பார்ந்த பெற்றோரையும்",
"மகன் தந்தைக்கு ஆற்றும் உதவியை"யை உணர்ந்து நடக்கும்
நன்மக்களையும் பாராட்டுதல் வழக்குக்கு வந்தது.
ஒரு நாடு முறை பிறழ்ந்த ஆட்சிக்கும், குழப்பத்திற்கும்
பலிப்பசு ஆனபோது "விசுவாசமான மந்திரிகளை"ப்
போற்றுதல் உண்டாயிற்று.

---

1. சீன நாட்டில் சக்கரவர்த்திகள் ஆண்டகாலத்தில் அவர் எங்கேயோ இருந்தார். மக்கள் அவரை அறியார். அவர்கள் அறிந்தது மாவட்ட அதிகாரிகளும், மாநில ஆளுனரும் தான். இப்பாடலுக்கு ஆங்கிலத் தலைப்பு Rulers என்பதாகும்.

உ
சிவமயம்

# சிதம்பரச் செய்யுட்கோவை

A String of verses on Chidambaram
By Kumaragurupara Swamigal.
Translated into English by K. M. Venkataramiah.

— அராகம் —

1. கறைவிட முகவெரி கனல்விழி யொடுமிளிர்
பிறையெயி றெடுமிடல் பெறுபக டொடுமடல்
எறுழ்வலி யொடுமுரு மிடியென வருமொரு
மறலிய துயிர்கொள மலர்தரு கழலினை.

With glowing reddish eyes disgorging poison,
With gleaming crescent shaped teeth,
Riding on a rude buffalo,
With warring great strength,
Like a thunderbolt,
Yama approached;
To take away his life,
You spurned him with your feet!

2. உலகமொ டுயிர்களும் உலைதர வலம்வரும்
மலர்மகள் கொழுநனும் மகபதி முதலிய
புலவரும் அடிகள்ஓர் புகலென முறையிட
அலைகடல் விடமுனம் அமுதுசெய் தருளினை.

The world along with the living beings becoming desolate,
Circumambulating,
The spouse of Lakshmi seated on the lotus,
Indra, the lord of sacrifice,
And the other celestials,
Prayed, "O Lord! grant us refuge";
And You devoured poison of the ocean!

3. விசையில்எம் இறைவியும் வெருவர இரசத
அசலம(து) அசைதர அடல்புரி தசமுக
நிசிசரன் மணிமுடி நெறுநெறு நெறுவென
வசையில்பொன் மலரடி மணிவிரல் நிறுவினை.

With force,
Goddess Uma becoming startled,
Ravana, the warring temfaced rakshasa,
Lifted Mt. Kailas, the silver mountain;
Hiscrown set with precious stones to snap,
You pressed with Your blemishless golden
flowerlike toe!

4. இலவிதழ் மதிநுதல் இரதியொ(டு) இரதம(து)
உலைவற நடவிடும் ஒருவனும் வெருவர
அலைகடல் நெடுமுரசு அதிர்தர எதிர்தரு
சிலைமத னனைஅடல் செயும்நுதல் விழியினை.

Rathi having lips like the petal of silk cotton
and moonlike forehead,
And (Vasantha) the charioteer to become frightened,
The drum sounding like the dashing sea,
Cupid confronted (thee ;
And Thine eye in the forehead caused him
destruction!

— ஈரடி அம்போதரங்கம் —

அருவமும் உருவமும் ஆகி நின்றும் அவ்
அருவமும் உருவமும் அகன்று நின்றனை
சொல்லொடு பொருளுமாய்த் தோன்றி நின்றும்அச்
சொல்லையும் பொருளையும் துறந்து நின்றனை.

Though formless or being in form
You are beyond Formless and Form.
Though You are word and its significance
You are beyond word and its significance.

— ஓரடி அம்போதரங்கம் —

அந்நலம் விழைந்தவர்க்(கு) அறமும் ஆயினை
பொன்னலம் விழைந்தவர் பொருளும் ஆயினை
இன்னலம் விழைந்தவர்க்(கு) இன்பும் ஆயினை
மெய்ந்நலம் விழைந்தவர் வீடும் ஆயினை.

Thou art VIRTUE for those who long for it;
Thou art WEALTH for those who desire gold;
Thou art HAPPINESS for those who covet domestic pleasure;
Thou art BEATITUDE for those who wish consummate bliss.

— முச்சீர் ஓரடி அம்போதரங்கம் —

முத்தொழிலின் வினைமுதல் நீ
மூவர்க்கும் முழுமுதல் நீ
எத்தொழிலும் இறந்தோய் நீ
இறவாத தொழிலினை நீ
இருவிசும்பின் மேயோய் நீ
எழில்மலரின் மிசையோய் நீ
அரவணையில் துயின்றோய் நீ
ஆலின்கீழ் அமர்ந்தோய் நீ

Thou art the Doer of triple functions* of Godhead;
Thou art the sole cause of the (Hindu) Trinity†;
Thou art beyond all actions;
Thou art the Doer of actions incessant;
Thou art manifest in the broad heavens;
Thou art seated on the lovely lotus (as Brahma);
Thou art reclining on the serpent couch (as Vishnu);
Thou art seated under the Kallal tree ‡

* breation, preservation and destruction.
† Brahma, Vishnu and Rudra.
‡ as Dakshnina moorthi.

# திருக்களிற்றுப்படியார்

## தெளிவுரை :

### கு. சுந்தரமூர்த்தி எம்.ஏ.,

95. (தெ-ரை) திருவியலூரில் எழுந்தருளியிருக்கும் குருமூர்த்திகள் தம் பேரருட் பெருக்கினுல் என் மலங்களை நீக்கித் தம் அடிமையாக ஆட்கொண்டருளி அடியனேன் திருவருளில் ஒன்றிய உணர்வு நிலையில் அவ்வாறு உணரும் உணர்வாகவும், உணரப்படும் பொருளாகவும் உடன் நிற்பர். அந்நிலை முதிர்ந்தவிடத்து அடியேன் உணர்தற்குரிய பேரின்பமாயும் நிற்பர். பழைய பயிற்சி வயத்தால் ஒரோவழி உலகியற் பொருள்களைக் காணும் நிலைவரின் அவ்வாறு காணப்படும் பொருளாயும், அடியேனிடத்துக் கலந்து நிற்பர் என்பதாம்.

குற்றம் - ஆணவ முதலிய மலங்கள். குருமூர்த்திகள் தம்மை அழுந்தி அறிதற்கும் துணையாவர்; அவ்வாறு அழுந்தி அறிவதாலாய பேரின்பமாயும் நிற்பர்; ஒரோர்வழி பிறவற்றைக் காணநேரின் அப் பொருளாயும் நிற்பர் என அவர் செய்யும் கருணையை நினைந்து இன்புறுகின்ருர் ஆசிரியர்.

96. ஆளுடையான் எந்தரமும் ஆளுடையா னேஅறியும்
தாளுடையான் தொண்டர் தலைக்காவல் — நாளும்
திருவியலூர் ஆளும் சிவயோகி இன்றுஎன்
வருவிசையை மாற்றினுன் வந்து.

(தெ - ரை) திருவியலூரை என்றும் தாம் எழுந்தருளியிருப்ப தற்குரிய இடனுகக் கொண்டு வீற்றிருந்தருளும், சிவயோகியாகிய ஆளுடையான் என்னும் திருப்பெயரை உடையான், என் போன்ருரை யும் அடிமை கொள்பவனுவான். உயிர்களின பக்குவ நிலையை அறிந்து ஆட்கொண்டருளும் திருவடிகளையுடையவ னுவான். அத் தகையோன் இன்று எளிவந்து என்பிறப்பு இறப்பை மாற்றினுன் என்பதாம்.

ஆளுடையான் - திருக்கடவூர் உய்யவந்த தேவரை ஆட்கொண் டருளிய திருவியலூர் உய்யவந்த தேவரின் திருப்பெயர் இதுவாகும்.

தொண்டர்களை ஆளாக (அடிமையாக) உடைமையால் ஆளுடை யான் என்ற பெயர் காரணப் பெயராகவும் கருதுமாறு ஆசிரியர் அருளுகின்றார். நாளும் - என்றும். வருவிசை - வினைக்கீடாக உயிர் போக்கு வரவு புரியும் நிலை.

97. தூலத் தடுத்த பளிங்கின் துளக்கமெனத்
தூலத்தே நின்று துளங்காமல் - காலத்தால்
தாளைத்தந்து என்பிறவித் தாளை அறஇழித்தார்க்(கு)
ஆளன்றி என்மா றதற்கு

(தெ - ரை) பருப்பொருளாகத் தோன்றும் பளிங்கு தன்முன் தோன்றும் பொருள்களின் நிறத்தையே காட்டுமாறுபோல, உட லொடு கூடிய யானும் அவ்வுடலொடு தொடர்புடைய உலகியல் பொருள்களையே கண்டு மயங்காதவாறு தக்க அமயத்தில் தம்முடைய திருவடியை என் தலையிலும் மனத்திலும் நிற்குமாறு செய்தருளி பிறவி வேரையும் முழுமையாக அறுத்துப் பேருதவி புரிந்தருளிய குருமூர்த்தி களுக்கு அடிமை செய்து வாழ்வதன்றி வேறு என்ன கைம்மாறு செய்ய இயலும்? வேறு ஒன்றும் செய்ய இயலாது என்பதாம்.

பளிங்கு தன் நிறத்தைக் காட்டாது தன் முன் நிற்கும் பொருள் களின் நிறத்தையே காட்டும். அதுபோல உயிர் உடலெடுப்பதன் வாயிலாக அவ்வுடற்குச் சார்பாய பொருளிலேயே தலைப்படும். அவ்வாறு தலைப்படாது முத்திப்பேற்றிற்கு ஆளாக்கினார் என்பார், 'தூலத்தே நின்று துளங்காமல்' என்றார். பிறவித்தாள் - பிறவிவேர். அற - முற்ற.

98. இக்கணமே முத்தியினை எய்திடினும் தான் நினைந்த
அக்கணமே ஆனந்தம் தந்திடினும் — நற்கணத்தார்
நாயகற்கும் நாயகிக்கும் நானடிமை எப்பொழுதும்
ஆயிருத்தல் அன்றியிலேன் யான்.

(தெ - ரை) இப்பொழுதே இறைவன் முத்திப்பேற்றை வழங்கி னும், அன்றித் தான் விரும்பும் அமையத்தே பேரின்ப நுகர்வைத் தந் தருளினும் இவைபற்றிப் பெருமிதமுறுதலோ வியப்பெய்துதலோ வேண்டுவதில்லை. நற்றவமுடைய அடியார்களுக்கு அம்மையப்பராக விளங்கியருளும் குருமூர்த்திகளுக்கு நான் மீளாத அடிமையாய் இருத் தலே அமையும். அதுவன்றி யான் வேறு யாது செய்யவல்லேன்! என்பதாம்.

குருமூர்த்திகளின் கருணைப் பெருக்கை நினைந்து அடியவனாய் வாழ்வதே கடமையாகும்.

99. என்னை உடையவன்வந்து என்னுடனாய் என்னளவில்
என்னையுந்தன் ஆளாகக் கொள்ளுதலால் — என்னை
அறியப்பெற் றேன்அறிந்த அன்பருக்கே ஆளாய்ச்
செறியப்பெற் றேன்குழுவிற் சென்று.

(தெ - ரை) என்னை எஞ்ஞான்றும் அடிமையாக உடைய பெருமான் என்பொருட்டு எளிவந்து என்னுடன் கலந்து, புல்லிய என்னறிவளவிலும் விளங்கி என்னைத் தன்னடிமையாகக் கொள்ளுதலால் என்னை நான் அறியப் பெற்றேன். இத்தகைய பேறுபெற்ற அடியவர்களுக்கே அடிமையாய் அவர்தம் திருக்கூட்டத்தில் சேர்ந்து ஒழுகப் பெற்றேன் என்பதாம்.

உயிரது இயல்பும் அதனால் ஈட்டப்பெற்ற வினையும் அதன் பயனும் அதனை விலக்கிக்கொள்ளுமாறும் அறிவதே 'என்னை யறியப் பெற்றது' என்பதாம். 'பத்தரினத்தனாய்ப் பரன் உணர்வினால் உணரும் மெய்த்தவரை மேவா வினை' என்னும் சிவஞானபோதம். ஆதலின் அன்பரொடு மருவி வாழ்தல் அடியவரது கடமையாகும்.

100. சிந்தையிலும் என்தன் சிரத்தினிலும் சேரும்வகை
வந்தவனை மண்ணிடைநாம் வாராமல் — தந்தவனை
மாதினுடன் எத்திறமும் வாழ்ந்திருக்க என்பதலால்
ஏதுசொலி வாழ்த்துவேன் இன்று.

(தெ - ரை) தம்திருவடி மலர்கள் அடியனின் உள்ளத்திலும் சென்னியிலும் சேர்ந்திலங்குமாறு குருவாக எழுந்தருளிவந்த பெருமானை, அதனால் அடியேன் இம்மண்ணுலகில் பிறந்து இறந்து வாரா வண்ணம் பேரருட் பேற்றைத் தந்தருளியவனை, அவனிடத்தினின்றும் பிரியாது விளங்கும் திருவருட்சத்தியுடன் வாழ்க! வாழ்க! என வாழ்த்தி மகிழ்வதன்றி இதுபொழுது வேறு ஏது சொல்லி வாழ்த்த இயலும்? என்பதாம்.

'அம்மையப்பரே உலகுக்கு அம்மையப்பர் - அம்மையப்பர் அப்பரிசே வந்தளிப்பர்' எனத் தொடக்கத்தில் கூறியவாறு, குருநாதராக வந்தருளியவர் அம்மையப்பரே ஆதலான் 'மாதினுடன் வாழ்ந்திருக்க என்பதல்லால்' எனக் கூறினார். இறைவனின் கருணைப் பெருக்கை நினைந்து அவனது அடிமையாக விளங்கி வாழ்த்துவதும் வணங்குவதும் அல்லது உயிர் இறைவனுக்கு வேறு என் செய்ய இயலும்?

# புத்தாண்டுப் பிறப்பு

ஜோதிஷம் **A. இராசமாணிக்கம்**
திருப்பனந்தாள்.

கலியுகாப்தம் 5081 பிரபவாதி 54 ஆம் ஆண்டு ரௌத்திரி ௵ சித்திரைமீ 1௳ பானுவாரம் உத்திரட்டாதி நக்ஷத்திரம் கூடிய தினத்தன்று சூரிய உதயம் முதல் 12 நாழிகை 20 விநாடிக்கு மீன ராசியில் மிதுன லக்கினத்தில் புனிதமாக சௌரமான ரௌத்திரி௵ பிறக்கிறது. ஒவ்வொரு சௌரமான வருஷத்தின் சித்திரை மாதப்பிறப்பிற்கு முன் பங்குனியில் வரும் சுக்கிலபட்சத்தின் பிரதமையே சாந்திரமான வருஷாரம்பமாகும். இந்த சௌர சாந்திரமான சம்வற்சரம் தான் நம் பஞ்சாங்கத்தில் குறிக்கப்படுகிறது. சுக்கிலபட்ச பிரதமை முதல் அமாவாசை முடிய ஒரு சாந்திர மாதம். சூரியன் ஒரு ராசியில் சஞ்சரிக்கும் காலம் ஒரு சௌர மாதம். சாந்திர மாதங்கள் சைத்திராதி பால்குனந்தம் ஒரு சாந்திரமான௵ ஆகும். சௌர மாதங்கள் மேடாதி மீனந்தம் ஒரு சௌரமான௵ ஆகும்.

இவ்வித சௌர சாந்திரமானத்தில் பிரபவ வருஷம் முதல் அக்ஷய வருஷம் முடிய உள்ள 60 ஆண்டுகளில் முதல் 20 ஆண்டுகள் உத்தம பலன் தருவன என்றும் இரண்டாவது 20 ஆண்டுகள் மத்திம பலன் தருவன என்றும் மூன்ருவது 20 ஆண்டுகள் அதம பலன் தருவன என்றும் வருஷங்களின் பலன்களிலிருந்து பொதுவில் கொள்ளவேண்டியதாகிறது.

வருஷங்களின் பலன்களை நம் முன்னோர்கள் முன்னூல்களில் வெண்பாக்களாக இயற்றியுள்ளனர். அவற்றில் இந்த ரௌத்திரி ஆண்டிற்கு,

“ மிக்க ரௌத்திரியில் வேளாண்மை யற்பமாம்
மக்கணேயான் மடிவர் வான்பொருள்போம் — தொக்க
மனக்கவலை யுற்றுழல்வர் மாந்தர் வடக்கிற்
கனக்க வறுமைவருங் காண்”.

என்று லோகத்திற்கு பொதுவாக ஆண்டு பலன் கூறப்பட்டுள்ளது. மேற்கூறியபடி ஆண்டுகளின் பகுப்பில் உள்ள உத்தம பலன் மத்திம பலன்களை நடத்தவும், அதம பலன் நீக்கி லோகத்தில் ஜீவன்களை

இரட்சிக்கவும் இறைவன் அருளி வான மண்டலத்தில் நவநாயகர்களை ஒவ்வொரு ஆண்டுக்கும் ஏற்படுத்துகிறார்.

## நவ நாயகர்கள்

மீனபூர்வ பிரதம ரசனு மேடமாத முதல் வாரமந்தி
ரிசேனையாதிபன் சிங்கக்கடகமே செழித்த பைங்கூழ்
சிலை தானியாதிபன், னூனமிலாத்துலையே ரசாதிபனுற்
றபாடாண மோங்கு மகரமே யான தானியம் போக்கு
மியாழ் சூரியனுதிரைப் பூணி மாறிகலக்குமே.

என்று வருஷாதி நூலில் கூறியபடி இந்த ரௌத்திரி ஆண்டிற்கு சென்ற சித்தார்த்தினு மீனமாதம் பூர்வபட்சத்தின் பிரதமை அன்றைய வாராதிபன் சந்திரன் இராஜாவாகவும், ரௌத்திரினு மேட மாதப்பிறப்பின் வாரதிபதி சூரியன் மந்திரியாகவும். ஆனி மாதப் பிறப்பின் வாராதிபதி சனிஸ்வரன் அர்க்காதிபதியாகவும், ஆடி மாதப்பிறப்பின் வாராதிபதி புதபகவான் சஸ்யாதிபதியாகவும், சிம்ம மாதப்பிறப்பின் வாராதிபதி சனீஸ்வரன் சேனாதிபதியாகவும், துலா மாதப்பிறப்பின் வாராதிபதி சுக்கிரபகவான் இரஸாதிபதியாகவும், மார்கழி மாதப்பிறப்பின் வாராதிபதி சந்திரன் தான்யாதிபதியாக வும், திருவாதிரை நக்ஷத்திரத்தில் சூரியன் வருகிற தினத்தின் வாராதி பதி சனீஸ்வரன் மேகாதிபதியாகவும், தைமாதப் பிறப்பின் வாராதி பதி புதபகவான் நீரஸாதிபதியாகவும் ஆகி லோகசம்ரட்சகர்களாக வருகிறார்கள்.

இவ்விதமாக வருகிற சௌர சாந்திரமானம் நம் தென்னாட்டில் ரௌத்திரி நாம சம்வற்சரம்; ஒரு ராசியில் குரு சஞ்சரிக்கிற கால மாகிய ஒரு ஆண்டு பார்ஹஸ் பத்தியமானம்; அது வடநாட்டில் ஸ்ரீமுக நாமசம்வற்சரம் குருதயத்தால் மாக பால் குணப்தங்களாகும்.

வருஷ தேவதை ஹிரண்ய கர்ப்பராவார். பசுநாயகன் கோபால னுவார். அதனால் லோகத்தில் துஷ்ட நிக்ரஹ சிஷ்டபரிபாலனமும் பசு பால் விருத்தியும் ஏற்படும். ஸ்திரி ஜனங்கள் வெகுவாக பல துறையிலும் பதவி ஏற்று சேவை புரிவர். நாடு சுபிட்சமாகும்.

மேலும் இவ்வித விஷயங்களை அறிவிக்கிற பஞ்சாங்க சாஸ் திரத்தை புத்தாண்டு தினத்தில் தெய்வ சன்னதி அல்லது புனிதமான இடத்தில் முதன்முதல் படிப்பது மேலானது. சோதிட பரிச்சயமுள்ள சாஸ்திரிகள் குருக்கள்மார்களின் திருவாக்கினால் கருத்து விளங்கப் படிப்பதை எல்லோரும் பக்தி சிரத்தையுடன் கேட்டறிந்து நலம்பெற வேண்டும்.

குறிப்பு : சம்வற்சரம் — வருடம்.

# திருவாரூர் பாதி திருவொற்றியூர் பாதி
# வெண்பாவந்தாதி

ஆசிரியர்: வித்துவான் **தியாகராச செட்டியார்**

கூறுதமி ழொற்றியூர்க் கோமானுக் கென்செய்தோ
மேறு விடைமே லெழுந்தருளி — நாறுகுழ
லம்மையொடு காட்சி யளித்தருளி நன்னெஞ்சே
நம்மைப் புரந்தருள நாம். 26

நாமா தவமுடையோ நன்னெஞ்சே தென்கமலைக்
கோமா னெதிர்நின்று கும்பிடோம் — பூமாலை
சூடோ மினியகவி சொல்லித் துதியோங்கூத்
தாடோஞ் சிறிதுமித னால். 27

ஆல மிடற்றி லணிந்துமலர் மாதர்க்கு
நீலஞ் செவியி னிறுத்தினய் — கோல
மருப்பணிந்த வொற்றியூர் வள்ளா லுனது
திருப்புகழுக் கீறுண்டோ செப்பு. 28

செப்புங் கமலைத் தியாகேசா வென்றுநீ
யொப்பு முயர்வு மொருவின — யப்பனே
யுன்னைவிட வென்னே யொழித்தருள்வார் யார்சேயை
யன்னைவிட லன்றே யழகு. 29

அழுதபிள்ளை பாலருந்து மென்பா ரழுது
மிழுதையேன் மாட்டிரக்க மின்றே — தொழுதகையை
வெட்டுவா ரில்லையொற்றி மேவுபர மாவிதழிக்
கட்டுவார் வேணியழ கா. 30

காவேந்து பொன்னகரங் கைவிட்டுத் தென்னூர்ப்
பூவேந்து பூங்கோயில் புக்கமர்ந்தாய் — சேவேந்து
மப்பனே யென்னே யகற்றிற் பழியுண்டோ
துப்பைநேர் வேணியாய் சொல். 31

சொல்வேன்கே ளேயேநின் றூவாயின் மண்ணிட்டு
வெல்வே னெனைநீ விடுத்தகல்வா — யல்வாய்
களத்தனெற்றி யூராளி காமற்காய்ந் தானென்
னுளத்த னருள்வலிகொண் டோர்ந்து. 32

ஓராரு நின்புகழை யோர்ந்துன்ற டஞ்சமெனச்
சேராரு மின்கவிகள் செப்பாருஞ் — சீரே
திருந்துங் கமலைத் தியாகேசா மண்ணி
லிருந்தென் னிறந்தென் னியம்பு. 33

இயங்கலிக்கு மொற்றியூ ரெந்தாய்நின் னன்பர்
நயங்கலிக்கும் பாட னவிலேன் — பயங்கலிக்கு
நெஞ்சேன் கொடுநோயை நீக்கியடி யேன்முன்னின்
றஞ்சேலென் னீயே யரண். 34

அரணம் பொடித்த வழகாநா யேற்கு
மரணம் பிறப்பிரண்டு மாற்றிச் — சரணந்
தருவாயே லாரூர்த்தி யாகேச னென்பே
ரொருவாது நிற்கே யுறும். 35

உற்ற நிராமயனென் றேதற்கேற் பச்சிறியேன்
பெற்ற பிணிவருத்தம் பேசினேன் — முற்றுணர்ந்து
நீயறியா யொற்றியூர் நின்மலா நீயறியி
னேயறியே னன்றே நுவல். 36

நுவலடியார் துன்பொழியா நோன்புமுனக் குண்டோ
கவலடியேன் றுன்பங் களையாய் — சுவலினிடைக்
கங்காளா தென்கமலைக் காமாரி வெற்புயிர்த்தாள்
பங்காளா வென்னே பகர். 37

பகலவன் கண்ணைப் பறித்தாய் மகத்தி
லிகலிலேன் கண்மறைத்தா யென்னே — பகையு
முறவுமிலா னென்ப துணர்த்தவோ வொற்றி
யறவிடையாய் நாயேற் கறை. 38

அறையு மறையு மரியு மயனு
நிறையுஞ் சுரருமெதிர் நின்று — பறையுந்
துதியோநின் பூஞ்செவிக்குத் தொல்வளஞ்சே ராரூர்ப்
பதியேநா யேன்புகலும் பாட்டு. 39

பாடும் பணியொடுநின் பாதப் பணியடியேன்
கூடும் பொருட்டடிமை கொண்டருள்வாய் — சூடும்
பிறையோய் திருவொற்றிப் பெம்மானே யார்க்கு
மிறையோ யிரங்குற் றினிது. 40

இனிய பசுந்தேனு மின்னமுதும் பாலுங்
கனிரசமும் பாகுங் கலந்து — நனிநின்
செவிக்கருத்த நாவலூர்ச் செம்மலோ வாரூர்ப்
புவிக்கரசே நாயேன் புகல். 41

புகலெனக்கு நீயன்றிப் புண்ணியா வுண்டே
னகவெடுத்து நம்பா நவில்வாய் — ககனந்
தடவுபொழி லொற்றியூர்ச் சங்கரா நாயே
னிடரொழித்துக் காப்பா யினி. 42

இனியடியே னென்செய்வேன் யாரை யிரப்பேன்
பனிமதியஞ் சூடும் பரமா — நுனியகதிர்
வேலோனைப் பெற்ற விமலாவா ரூருமையாள்
பாலோ யெனதிடுக்கண் பார். 43

பாரளந்த மாயவனும் பங்கயத்து மேயவனு
நீரளந்த செய்யசடை நின்மலா — காரளந்த
கண்டாவென் றேத்துங் கபாலியொற்றி யூரவருட்
பண்டார மேகண்ணேய் பாற்று. 44

பாவலருங் காவலரும் பண்ணவரு மண்ணவரும்
பூவலர்கொண் டர்ச்சித்துப் போற்றியே — நாவலருஞ்
சீருரைக்குந் தென்கமலைத் தெய்வமே யுண்டோநின்
பேருரைக்கத் தீராப் பிணி. 45

பிணியென் செயுநெஞ்சே பேதுறே லொற்றி
மணிகண்டன் பாத மலரைக் — கணிகொண்டு
பூசித்து நின்று புனைந்தேத்தி யெஞ்ஞான்று
நேசித்தோ வாம னினை. 46

நினைவாயெஞ் ஞான்றுமெதிர் நின்றுகவி மாலை
புனைவாயென் ரூரூர்ப் புனித — னெனையடிமை
கொண்டா னினியென் குறைநெஞ்ச மேயனையன்
வண்டார் மலர்க்கழலை வாழ்த்து. 47

வாழ்த்துவது நின்புகழை மன்னுநின்ரு ளிற்சென்னி
தாழ்த்துவது நின்னைமனஞ் சார்த்துவதுஞ் — சூழ்த்தபொழில்
செற்றவொற்றி யூர்வாழுஞ் செல்வத் தியாகேசா
முற்றவமி லார்க்கெளிதா மோ. 48

மோதகக்கை யாற்பெற்ற முன்னவா நாயேன்செய்
பாதக முற்றுமழற் பஞ்சன்ரே — கோதகனின்
னன்பர்களை யாரூர்த்தே வாசிரியன் காவணத்துத்
துன்பகலக் கண்டு தொழின். 49

தொழுவா ரெழுவார் துதிப்பார் மதிப்பா
ரழுவார்கூத் தாடுவா ராகி — வழுவாநின்
ரெண்டரடித் தொண்டுசெயுந் தூப்பே றெனக்கொற்றி
யண்டர்பிரா னேயருள்செய் யாய். 50

ஆயாச் சிறியேனு மாய்ந்தபெரி யோருறும்பே
றேயா மகிழநினை யெய்தினேன் — றூயா
மதியு மரவுமுடி வைத்தாயா ரூர்வாய்
நிதியே யதனை நினைத்து. 51

நின்னைத் துதித்திடுவே னின்வாமத் தேய்ந்தமலைப்
பொன்னைத் துதித்துப் புகழுவே — னுன்னருமை
மக்களையு நன்கு வழுத்துவே ளொற்றி
யக்கரவம் பூண்டருளை யா. 52

ஆவா வடியே னலந்தே னணியாரூர்த்
தேவா தியாகச் செழுஞ்சுடரே — நோவாலே
யெத்தனைநா ளல்லற்பட் டேங்குவே னெம்பெருமான்
சித்தமிரங் காயென் செயல். 53

செயலொன்று மின்று திருவொற்றி யூர்வாழ்
புயலொன்று வேணிப் புனிதா — பயலொன்று
வெற்பரசி யோடு மிளிர்காட்சி தந்தருடொங்
கற்பனையான் பாநாய கா. 54

காட்டுங் கதிரவனீ காணுங்கண் ணுயேனென்
மாட்டு விளங்கொளிநீ மாற்றினுற் — காட்டுதிற
மெங்கு விளக்குவா யீசாதென் ணுரூரிற்
றங்கு மூலகநா தா. 55

# பரமசிவனும் பட்சபாதமும்

நெல்லை சிவமணி புலவர். **ம. சிவசம்பு** பி. லிட்.,

எல்லாம் வல்லவர் இறைவன். எல்லோரிடமும் ஒரேமாதிரியான அன்பைச் செலுத்துபவர். கருணைமூர்த்தி. அவர் ஆண் — பெண்; படித்தவன் — படிக்காதவன்; ஏழை — பணக்காரன்; உயர்ந்தவன் — தாழ்ந்தவன் என்றெல்லாம் வேற்றுமை பாராட்டாதவர். அவர் நடு நிலைமை உள்ளவர். பட்சபாதம் இல்லாதவர். என்றெல்லாம் அடியவர்கள் போற்ற நம் குமரகுருபர அடிகளார்மட்டும் இறைவனைப் பட்சபாதம் உடையவர்; நடுநிலைமை இல்லாதவர்; ஒருதலைக்காமம் உடையவர் என்றெல்லாம் கூறுகிறார். இவ்வாறு அவர் கூறுவதைக் கண்டு திகைக்கின்றோம். அவர் அதற்குரிய காரணங்களை எடுத்துக் கூறி நீர் பட்சபாதம் உடையவரா? இல்லையா? சொல்லும் என்று கேட்கும்பொழுது நாமும் அவருடன் சேர்ந்து ஆமாம் என்று கூறுகிறோம். இறைவனும் அதை மறுக்க முடியாமல் ஆம் நான் பட்சபாதம் உடையவன்தான் என்று ஏற்றுக்கொள்ள வைத்துவிடுவார்போல் பாடுகிறார்.

இறைவனே! நீயும் உமாதேவியும் முருகக்கடவுளை மாத்திரம் மடியில் இருத்தி முத்தம் இட்டு உள்ளம் நெக்குருக மோந்து அணைத்து மகிழ்கின்றீர்களே. உலகமெல்லாவற்றையும் பெற்ற உங்களுக்கு அவ்வொருவனிடத்தில் மாத்திரம் அன்புகாட்டும் பட்சபாதம் எப்படி வந்தது? பொதுவில் (சபையில்) நின்றுடுவோர் நடுநிலை உடையவராய் இருத்தல் வேண்டும் அன்றோ? உலகம் எல்லாம் பெற்ற உங்களுக்கு உலகத்தில் உள்ளோர் யாவரும் பிள்ளைகள்தானே? அப்படியிருக்க நீர் முருகக்கடவுளை மட்டும் மடியிருத்திப் பாராட்டுதல் பட்சபாதம் அன்றோ? என்று வினவுகிறார்.

முத்தாடி மடித்தலத்தோர் இளஞ்சேயை
உலகீன்ற முதல்வி யோடும்
வைத்தாடு வீர்பொதுவில் நின்றுடும்
உமக்கு இந்த வாரமென்னே?
கொத்தாடு சடையொடும் ஆனந்தவனத்தே
குறுந்தாள் நெடும்பூ தத்தொடு
ஒத்தாடு வீர் அடிகட்(கு) எல்லாமும்
பிள்ளை களென்(று) உணர்ந்திடீரே.

— காசிக்கலம்பகம். 72

சேய் — முருகக்கடவுள்; வாரம் — பட்சபாதம்.

தாய் ஒருத்தி நேரே இறைவனிடம் சென்ருள். இறைவனே ! நீ நடுவுநிலைமை தவருதவன். உனக்கு நடுநிலைமையின்மை எப்படி வந்தது ?

உன் திருமுடியைக் கங்கையாகிய பெண்ணுக்கும் இடப்பாகத்தை உமாதேவியாருக்கும் வழங்கினே. என் மகளுக்கு மாத்திரம் உன் புயத்தை வழங்கினுல் என்ன? உன்புயத்தில்தான் ஒருவரும் இல்லையே. அதனை வழங்குவதில் தவறு ஒன்றும் இல்லையே. அப்படியிருந்தும் நீ வழங்கவில்லை, நீ பட்சபாதம்உடையவன். நடுவுநிலைமை இல்லாதவன். என் மகள் படும் துன்பத்தை அறியாதவன் என்றெல்லாம் செவிலித்தாய் கூறுவதாக நம் குமரகுருபர அடிகளார் பாடுகிருர்,

வாணிலாப் பரப்பு மகுட கோடீரம்
மறிபுனற் கங்கை நங்கைக்கும்
வையமீன் றளித்த மரகதக் கொடிக்(கு)உன்
வாமபா கமும்வழங் கினையால்
பூணுலாங் களபப் புணர்முலை யிவட்குன்
பொற்புயம் வழங்கலை யெமர்போற்
பொதுவினின் ருயக்கு நடுவின்மை யிடையே
புகுந்த வா றென்கொலோ புகலாய்.

மதுரைக்கலம்பகம். 52,

மகுட கோடீரம் – முடியாக உள்ள சடை.

இவ்வாறு குமரகுருபரர் பாடுவதில்தான் எவ்வளவு இன்பம் ; குமரகுருபரர் இலக்கியங்களைப் படித்து மகிழ்வோம்.

---

## இதமான வாழ்வுக்கு எளிய வழிகள்–3

**(அ) தேள் கடிக்கு.**

நமச்சாரத்தையும், சுண்ணும்பையும் குழைத்துத் தேள் கொட்டிய வாயில் வைத்து அதையே மூக்கிலும் ஒரு முறை முகரச் செய்தால் விஷம் இறங்கி வலி நிற்கும்.

**(ஆ) எட்டு கால் பூச்சி கடிக்கு.**

எலுமிச்சை இலையின் கொழுந்தை நன்ருக அறைத்துக் கடி மேல் போட்டால் எட்டு கால் பூச்சி கடி புண் ஆறும்.

**(இ) விக்கலுக்கு.**

தாமரை விதைப் பருப்பை வெந்நீரில் அறைத்துக் கலக்கிக் கொடுக்க விக்கல் உடன் நின்று விடும்.

**(ஈ) மூக்கில் இரத்தம் வடிதலுக்கு.**

ஆடாதொடை இலையின் சாறுடன் தேனும் கலந்து மூன்று வேளை சாப்பிட குணமாகும்.

டாக்டர். N. சடையப்பன்.

# திருக்கணித பஞ்சாங்கம்

தி. கி. நாராயணசாமி, கடலூர் - 607 001.

ரௌத்திரிஹு சித்திரைமீ (1980 ஏப்ரல் - மே)

திதி, நட்சத்திரக் காலக் குறிப்பு (ரயில்வே மணி கணக்கில்)

| தமிழ்த. | ஆங்கிலத. | கிழமை | திதி | நட்சத்திரம் |
|---|---|---|---|---|
| 1 | (13-4-80) | ஞாயிறு | திரயோதசி 16-39 | பூரட்டாதி ஹுபிறப்பு |
| 2 | (14-4-80) | திங்கள் | சதுர்த்தசி 12-59 | உத்திரட்டாதி 9-25 |
| 3 | (15-4-80) | செவ்வாய் | ● அமாவாசை 9-16<br>பிரதமை 5-41 | ரேவதி 6-30<br>அசுவனி 27-41 |
| 4 | (16-4-80) | புதன் | துவிதியை 26-25 | பரணி 25-10 |
| 5 | (17-4-80) | வியாழன் | திரிதியை 23-38 | *கார்த்திகை 23-08 |
| 6 | (18-4-80) | வெள்ளி | சதுர்த்தி 21-29 | ரோகணி 21-45 |
| 7 | (19-4-80) | சனி | பஞ்சமி 20-08 | மிருகசீரிஷம் 21-08 |
| 8 | (20-4-80) | ஞாயிறு | சஷ்டி 19-38 | திருஆதிரை 21-22 |
| 9 | (21-4-80) | திங்கள் | சப்தமி 20-00 | புனர்பூசம் 22-16 |
| 10 | (22-4-80) | செவ்வாய் | அஷ்டமி 21-10 | பூசம் 24-18 |
| 11 | (23-4-80) | புதன் | நவமி 23-01 | ஆயில்யம் 26-47 |
| 12 | (24-4-80) | வியாழன் | தசமி 25-21 | மகம் 29-41 |
| 13 | (25-4-80) | வெள்ளி | ஏகாதசி 27-56 | பூரம் நாள்முழுவதும் |
| 14 | (26-4-80) | சனி | துவாதசி நாள் முழுவதும் | பூரம் 8-45 |
| 15 | (27-4-80) | ஞாயிறு | ,, 6-32 | உத்திரம் 11-55 |
| 16 | (28-4-80) | திங்கள் | திரயோதசி 9-01 | அஸ்தம் 14-53 |
| 17 | (29-4-80) | செவ்வாய் | சதுர்த்தசி 11-13 | சித்திரை 17-34 |
| 18 | (30-4-80) | புதன் | ○ பௌர்ணமி 13-05 | சுவாதி 19-55<br>சித்ரா பௌர்ணமி |
| 19 | (1-5-80) | வியாழன் | பிரதமை 14-35 | விசாகம் 21-54 |
| 20 | (2-5-80) | வெள்ளி | துவிதியை 15-41 | அனுஷம் 23-30 |
| 21 | (3-5-80) | சனி | திரிதியை 16-23 | கேட்டை 24-44 கத்திரி |
| 22 | (4-5-80) | ஞாயிறு | சதுர்த்தி 16-42 | மூலம் 25-34 [ஆரம்பம் |
| 23 | (5-5-80) | திங்கள் | பஞ்சமி 16-36 | பூராடம் 25-59 |
| 24 | (6-5-80) | செவ்வாய் | சஷ்டி 16-03 | உத்திராடம் 25-57 |
| 25 | (7-5-80) | புதன் | சப்தமி 15-02 | திருஓணம் 25-27 |
| 26 | (8-5-80) | வியாழன் | அஷ்டமி 13-32 | அவிட்டம் 24-28 |
| 27 | (9-5-80) | வெள்ளி | நவமி 11-33 | சதயம் 23-02 |
| 28 | (10-5-80) | சனி | தசமி 9-07 | பூரட்டாதி 21-10 |
| 29 | (11-5-80) | ஞாயிறு | ஏகாதசி 6-18<br>துவாதசி 27-12 | உத்திரட்டாதி 18-58 |
| 30 | (12-5-80) | திங்கள் | திரயோதசி 23-56 | ரேவதி 16-33 |
| 31 | (13-5-80) | செவ்வாய் | சதுர்த்தசி 20-39 | அசுவனி 14-03<br>போதாயன அமாவாசை. |

## உங்கள் ஜன்ம நட்சத்திரம் என்று வருகிறது?

உங்கள் ஜன்ம நட்சத்திரம் வரும் நாளில் ஆண்டுதோறும் – உங்கள் பெயரில் ஒரு புண்ணியகாரியம் நடைபெறவேண்டும். உங்கள் பெயர், முகவரி, பிறந்த மாதம் – (தமிழில்), நட்சத்திரம் ஆகிய குறிப்புக்களுடன் ரூ, 110-க்கான காசோலையும் அனுப்புங்கள். ஆண்டு தோறும், அந்தமாதம் அந்தநாளில் தஞ்சை மாவட்டம் கதிரா மங்கலம் ஸ்ரீ வநதுர்க்காபரமேஸ்வரிக்கு அபிஷேக அர்ச்சனை செய்து பிர சாதம் உங்கள் முகவரிக்கு அனுப்பப்பெறும். உங்களுக்கும் ஒரு முக்கியமான கடமையுண்டு. உங்கள் முகவரி மாற்றங்களை (மாற்றங் கள் இருந்தால்) அவ்வப்போது தெரிவிக்கவேண்டும். இந்தத் திட்டத் தில் நீங்கள் பங்குகொள்ள விரும்பும் விருப்பத்தின் வேகம் உங்கள் அதிர்ஷ்டத்தின் வேகத்தைப் பொருத்தது. தொகையும் விவரங்களும் அனுப்பவேண்டிய முகவரி:

**ஸ்ரீலஸ்ரீ காசிவாசி எஜமான் சுவாமிகள் அவர்கள்**
அதிபர், ஸ்ரீ காசிமடம், திருப்பனந்தாள் - 612 504.

# மதிநுதலும் - பிறைமதியும்

ச. தண்டபாணி தேசிகர்

வா! என்றவுடன் வந்திலே; என்ன ஆகுந்தெரியுமா? அம்மை யோடு உடனிருந்து பழகியவர் கள் நாங்கள். அவளுடைய பெருந் தன்மையான குணம் அனைத்தை யும் நாங்கள் அறிவோம். சில சாக்குப்போக்குகள் சொல்லி உன் னைத் தப்புவித்தோம் என்றார்கள் செவிலிகள்.

வானவீதியில் செல்லுகின்ற சந்திரன் காதிலே இந்த வார்த் தைகள் விழுகின்றன. திரும்பிச் செவிலியைப் பார்க்கிறான். என்ன நடந்துவிடுமாம்! என்ற ஏளன மும்-அலட்சியமும் அவன் பார்வை யில் அமைந்துள்ளன.

இதனைக் கண்ட செவிலியர் சிந்தை வருந்திற்று. நம் பேச்சை இவன் அசட்டை செய்யலாம். அழைப்பவள் அகிலாண்டமும் பெற்ற அன்னை அங்கயற்கண்ணி. அவள் பேச்சை இந்த அற்பனா அசட்டை செய்வது என்று மனத் திலே கொதிப்பு. இருந்தாலும் நாமும் சினத்தால் காரியம் நடக் காமற் போனாலும் போகும். காரி யம் பெரிதா? வீரியம் பெரிதா? வளைந்து கொடுத்தாவது காரி யத்தை முடிப்போம் என்று கருது கிறார்கள். இருக்கட்டும் அன்னை யின் அளவிலாற்றலை ஓரளவு அறி விப்போம்; பின் அவள் விருப் பத்தை விளக்கிக் கூறுவோம்! அதன்பின் அவள் ஆணையை அசட்டை செய்வதால் வரும் தீங்கை ஓரளவு தெரிவிப்போம். இவ்வளவும் தெரிவித்தபிறகு அவன் ஏதோ ஓரளவு ஆணவம் அடங்கி அறியாமை நீங்கி அச்சத்தோடு வருவான். அப்போது அவன் அச்சத்தைப் போக்க நாம் என்ன என்ன முறை களைக் கையாண்டோம். அதன் விளைவு என்ன ஆயிற்று என்று அறிவிப்போம். இவ்வளவிலாவது அவன் திருந்தமாட்டானா; அன்னை அங்கையற் கண்ணியின் ஆணைக்கு அஞ்சி விளையாட வரமாட்டானா; ஏதோபார்ப்போம் என்றுஎண்ணு கின்றனர்.

தண்மதியை நோக்கி – எங் கள் தலைவி எப்படிப்பட்டவள் தெரியுமா? என்று செவிலி வினவும்போது நீருண்டமேகம் வானத்திற் செல்லும் மதி மண் டலத்தை மறைத்தது. மதி சிறிது வழிவிலகிச் செல்கிறான். இதனைக்கண்ட செவிலிக்கு இவனை

யடக்கியாளும் உபாயம் ஒன்று தோன்றியது. சொல்பவளாக "மழை" என்று தொடங்கினுள். மழையாஎன்றுவாய்சோர்ந்தான் செவிலி, மழை என்ன பிரமாதம்! எங்கள் அம்மை 'மழைக் கொந்தளக்கோதை' அவள்தான் உன்னைப் பெரிய மனசு பண்ணி, 'வா' என்று அழைத்தாள். அவள் கூந்தல் நீருண்டு கறுத்த மேகம்; மேகம் போல்வது அன்று; மேகத்தின் கருமையை – இடி மின் முதலிய அதன் ஆற்றல்களை வென்றது; கருமையின் அழகால் மேகத்தையே வென்றது. மேகமோ உன்னை மறைப்பது, அந்த மேகம் இவள் கூந்தலுக்கு அடிமை. அத்தகைய கூந்தலழகு படைத்தவள் எங்கள் அம்மை. நம் எதிரியை நாமே வெல்ல முடியாவிட்டால் அவர்களுக்குப் பகையாக உள்ளவர்களை நாம் எந்த வகையிலோ நட்பாக்கிக் கொண்டு நம் எதிரியை முறியடிப்பது போர்த்தந்திரங்களுள் ஒன்று. அதனை நீயறியாயல்லை. நீயோ ஒரதிருஷ்டசாலி. நீயே சென்று தேடவேண்டிய துணை - பலகால் சென்று பணிந்து என்னைக் காத்தருள்க என வேண்டிக்கொள்ள வேண்டிய துணை உன்னை வலிய 'வம்' என அழைக்கிறது. நீயோ வலிய வந்த சீதேவியைக்காலால் இடறின முட்டாளாகிக் காலம் தாழ்க்கிருய்.

அதனுல்அம்மை 'அவன் இன்னுமா வந்திலன்' எனக் கடுகினுள். அவளோ யாரிடமும் கண்ணேட்டம் செய்யும் கயற்கண்ணி. நாங்களும் அவளுடைய பிள்ளைமைப் பருவத்திலிருந்து அதாவது மூன்றுமாதக் குழந்தைப் பருவத்திலிருந்து பழகிவருகிரும். அவளிடம் கோபக்குறிப்பை என்றுமே கண்டதில்லை. அவள் எங்களைப் பார்த்து 'அவன் இன்னமுமா வரவில்லை' என்று சிறிது கடுகடுத்த பார்வையுடன் கேட்டபோது நாங்கள் அக்கணமே நடுநடுங்கி கைகட்டி வாய்புதைத்து நின்ருேம். அவள்'என்ன'? என்றுசிறிது அதட்டிக் கேட்டவுடன், நாங்கள் இல்லையம்மா! அவன் தங்கள் எதிரே வரத் தயங்குகிருன். தலை குனிகிருன்; அதனுலேதான்... என்ருேம்.

அவள் என்னதயக்கமாம் என்ன நாங்கள் 'எல்லாம் இந்தப் புலவர்கள் படுத்துகிறபாடுதான். சந்திரன் வட்டமாக-ஒளியுடன் தண்ணளியுடன் இருப்பதால் பெண்களின் முகத்திற்கு ஒப்பாகவும், முகத்தை அவன் வென்றுவிட்டான் என்றும், முகம் அவனை வென்றுவிட்டது என்றும் தத்தம் காவிய நிலத்திலே கற்பனை வானிலே காட்டினுர்கள். அதனைக் கண்ட அவன் அங்கயற்கணெம் பிராட்டியும் ஒரு பெண்தானே! அவள் கண்ணிலே எப்படி விழிப்பது என்று ஒதுங்கி ஒதுங்கிப் போகிருன்' என்று உன்னைத் தப்பவைக்கலாம் என்ற எண்ணத்துடன் சொன்னேம். அவள் 'என் முகத்திற்குச் சமம்' என்ருே – தோற்ருேம் என்ருே எண்ணுகிருனு? அவ்வளவு ஆண

வமா' நம்முடைய முகச்செவ்வி எங்கே! அவன் உருவம் எங்கே? இரண்டையும் ஒன்ருக எண்ணி எடைபோடத் தொடங்கினனே! அதுவே முதற்குற்றம். தன்னி லுயர்ந்தாரைத் தமராகஎண்ணிப் பழகித்தான் உயர்லாமே தவிரத் தன்னேடு ஒருங்குவைத்து எண்ண லாமா? என்று சிறிது சினந்தாள். நாங்கள் 'அவனும் ஓரான்மா தானே! பரமஞானியா? அறியா மையால் அங்ஙனம் எண்ணி விட்டான் என்றேம். அவள் போனுற் போகட்டும். அவனே விளையாட வரச்செய்யுங்கள்; என்று ஆணையிட்டான். நாங்க ளும் அழைத்தோம் அவன் அப் படியும் வரவில்லை. கீழும் மேலும் நாற்புறமும் பார்க்கிறுன்.

அவன் முகத்திலே முன்போல அகங்காரக் குறிப்பு இல்லை; அச் சக் குறிப்பு அதிகமாகக் காணப் பட்டது. நாங்கள்விரைந்துபோய் 'அம்மா! அவன் ஒரு கோழை; பயந்தாங்கொள்ளி; நாலா பக்க மும் பார்த்துத் திடுக்கு திடுக் கென்று விழிக்கிறுன். நாங்கள் நினைக்கிறேம், அவனே விழுங்கும் கேது என்னும் பாம்பு இங்கும் வந்து விழுங்கிவிடுமோ என்று அஞ்சுகிறுன் போலிருக்கிறது. அதனுல்தான் வரவில்லை. தாம திக்கிறுன் என்று கூறினேம். அன்னை அங்கயற்கண்ணியின் சினஞ்சிறிது தணிந்தது. இப்படி யெல்லாம் சந்தர்ப்பத்திற்கு ஏற்ற வாறு சொல்லிச் சொல்லிப் பல முறை உன்னைத் தப்புவித்தோம்.

எத்தனைதரந்தான் தப்புவிக்க முடி யும். கெட்டிக்காரர்களாகிய எங் கள் புளுகு எட்டு நாளைக்கு இருக் குமா? ஒருகணத்தில் வெடிக்கத் தானே செய்யும். உண்மையுணர்ந் தால் என்ன நடக்கும் தெரியுமா? கடல் தண்ணீர் கொதித்தால் விளாவுவது எப்படி? அவள் சினந் தால் அதனை எப்படி மாற்றுவது? முடியவே முடியாது; உனக்குப் பிழைக்கும் வழியில்லவே இல்லை. சிந்தித்துப் பார். மூன்று முறை சிந்தித்துப் பார். செய்தக்க அல்ல செயக் கெடும்; செய்தக்க செய்யா மையானும் கெடும் என்பார்கள். எதையும் பருவத்தே பயிர் செய் வது நல்லது. அம்மை சினத்தை விட்டு விளையாட்டைத் திருவுளத் தடைத்து விளங்குகிறுள். இப் போது நீ வந்தால் ஏன் தாமதம் என்று கூட எண்ணமாட்டாள் உடனே ஏற்றருள் செய்வாள் என்றேம்.

அவன் சமயமாம்! சந்தர்ப்ப மாம்! எப்படியறிந்தீர்கள் என்று கேட்டான். நாங்கள், அம்புலி! கேள்; இப்போதுதான் மதுரைமா நகரில் உள்ள மதில்களில் கட்டி யுள்ள துணிக்கொடிகள், மேகக் கூட்டங்களைச் சுருட்டிக்கொண்டு வானுலகம்வரை யுயர்ந்து அங்கே யுள்ள தேவமாதர்களின் தலையை வாரிவிட்டு, முகத்திலுள்ள வியர் வைகளைத் துடைத்துவிட்டு, அம மகளிர்களே! சீக்கிரம் போங்கள், அம்மை அருள்ததும்ப லீலாவினே தையாக விளங்குகிறுள். இது தான் சமயம். போங்கள்விரைந்து.

உங்களுடன்விளையாடுவாள்என்று வேலை கொடுத்து அனுப்புகின்றன. அதனால் அம்மையின் சமயத்தை யறிந்தோம். அம்புலீ நீயும் வா. மதுரைத்துரைப் பெண்ணுடன் ஆடவா! என்று அழைக்கிறார்கள். இப்படி அதிருஷ்ட தேவதையழைத்தும் அவன் அசைந்து கொடுக்கவில்லை. கருணையுள்ளம் படைத்த செவிலியர் மீண்டும் ஆரும் பெறுத அமுதம் பெறலாம் வா என்று பரிந்தழைக்கிறார்கள்.

மழைக்கொந் தளக்கோதை வம்மென்ற வளவினீ
வந்திலை யெனக்கடுகலும்
வாண்முகச் செவ்விக் குடைந்தோதுங் கினவனெதிர்
வரவொல்கி யோபணிகள்கோள்
இழைக்குங்கொல் பின்றொடர்ந் தெனவஞ்சி யோதாழ்த்
திருந்தனன் போலுமெனயாம்
இத்துணையு மொருவாறு தப்புவித் தேம்வெகுளின்
இனியொரு பிழைப்பில்லைகாண்
தழைக்குந் துகிற்கொடி முகிற்கொடி திரைத்துமேற்
றலம்வளர் நகிற்கொடிகளைத்
தாழ்குழலு நீவிநுதல் வெயர்வுந் துடைத்தம்மை
சமயமிது வென்றலுவலிட்
டழைக்குந் தடம்புரிசை மதுரைத் துரைப்பெணுடன்
அம்புலீ யாடவாவே
ஆணிப்பொன் வில்லிபுணர் மாணிக்க வல்லியுடன்
அம்புலீ யாடவாவே.

— மீனுட்சியம்மை பிள்ளைத்தமிழ் அம்புலிப் பருவம் 9.

மழைக்கொந்தளக் கோதை - மேகம் போன்ற கரிய கூந்தலையுடைய மீனும்பிகை. உடைந்து - தோற்று. பணிகள் - பாம்புகள் பிழைப்பு - தப்பிப் பிழைக்கும் உபாயம். புரிசை - மதில். புரிசை துகிற் கொடியால் முகிற்கொடி திரைத்து நகிற்கொடிகளின் குழல் நீவி, வெயர்வு துடைத்து 'அம்மை சமயம் இது' என்று அலுவலிட்டு அழைக்கும். அத்தகைய புரிசை சூழ்ந்த மதுரை. அந்த மதுரைப் பெண்ணுடன் அம்புலீ ஆடவா என இயைத்துப் பொருள்காண்க. நீவி - சீவி. அதாவது சிக்கறக் கோதிவிட்டு.

# மூன்று பரிவட்டங்கள்

**கி. வா. ஜகந்நாதன்.**

திருவாரூரில் எழுந்தருளியுள்ள தியாகேசருக்குத் தனியே ஒரு பரிவட்டம் அணிவார்கள். அதற்குத் தியாகப்பரிவட்டம் என்றுபெயர். அதற்கென்று சில இலக்கணங்கள் உண்டு.

குமரகுருபரர் இறைவனுடைய திருமேனியை அலங்கரிக்கும் பரிவட்டங்களாக மூன்று பொருள் களைச் சொல்கிருர். இந்த உலகமே திருமேனியாகவும் திசைகளேதிருக்கரங்களாகவும் விளங்குபவன் இறைவன். அவனுடைய அகண்ட சொரூபத்தில் அடங்காதவை யாவும் இல்லை. இந்த விசுவேசுவரனுக்கு யாரால் பரிவட்டம் கட்ட முடியும்? தஞ்சாவூர்ப் பிருகதீசுவரர், கங்கை கொண்ட சோழேச்சுரர் ஆகிய எம்பெருமான்களின் திருமேனிகளுக்கே தனியே பரிவட்டத்தை நெய்து சாத்துகிருர்கள். திருவேங்கடப்பெருமானுக்கு முப்பத்தாறுமுழம் பரிவட்டம். அதைத் தனியே நெய்து வழங்கும் தொழிலாளர்கள் இருக்கிருர்கள்,

தியாகேசரை இப்போது லோகேசுவரராகவும், விசுவேசராகவும் பார்க்கிருர் குமரகுருபர முனிவர். அண்டமே வடிவான அப்பெருமானுக்கு இயற்கையாகவே பரிவட்டங்கள் அமைகின்றனவாம்.

பெருஞ்செல்வர்கள் பல பல ஆடைகளை மாற்றி மாற்றி உடுப்பார்கள். வேளைக்கு ஓர் ஆடையைப் புனைவார்கள். தியாகேசரைப் போன்ற செல்வர் யார் இருக்கிருர்கள் ? ''தேரூர்ந்த செல்வத் தியாகர்'' (2) அவர். தம்மை வழிபடுபவர்களுக்குப் பெருஞ்செல்வம் நல்கும் பெருமான் அவர். தியாகேசர் என்னும் திருநாமமே அவருடைய வள்ளன்மையைப் புலப்படுத்துகிறது. ''இம்மையே தரும் சோறும் கூறையும் ஏத்தலாம் இடர் கெடலுமாம், அம்மையே சிவ லோகம் ஆள்வதற்குயாதும் ஐயுற வில்லையே'' என்று சுந்தரர் பாடுவார்.

பிறருக்கு உண்டியும் உறையுளும் உடையும் அருளும் வழங்கும் தியாகப்பெருமான் விசுவமே தம் உறையுளாகவும், எல்லாப்பொருளும் தம் உண்டியாகவும்; திசைகளே தம் ஆடையாகவும் கொண்டவர். எங்கும் பரந்த அப்பெருமானுக்கு நாம் நெய்து புனையும் உடை எம்மாத்திரம்? அன்பர் புனையும் ஆடையை அவர் மூர்த்தீகரித்துப் புனைந்து கொள்கிருர். ஆனல் அவருடைய அகண்டமான விசுவரூபத்துக்கு இந்தக் கண்டமான பரிவட்டங்கள்

போதுமா? ஆகவே, அவர் தாமே உகந்து அகண்டமான பரிவட்டங்களை அணிந்து கொள்கிறார். வேளைக்கு ஒரு பரிவட்டமாக, வெவ்வேறு வண்ணமுள்ள பரிவட்டங்களை அணிந்து கொள்கிறார். அதைச் சொல்லவருகிறார் குமரகுருபர முனிவர்.

அவருடைய புகழ் பெரிது. ஈவதனல் புகழ் உண்டாகும்.

''ஈவார்மேல் நிற்கும் புகழ்''

என்று திருவள்ளுவர் சொல்கிறார். எல்லாரையும்விட மிகுதியாகவழங்கும் வள்ளலாகிய தியாகேசர் புகழின் மிகுதியைச் சொல்லவும் வேண்டுமா? அந்தப்புகழ் பெருங்கடலைப்போலத் தேங்கிக் கிடக்கிறது.

''தேங்குபுகழ் ஆரூர்த் தியாகர்''

என்று சொல்கிறார் முனிவர்.

அவர் பகலில் ஒருவித ஆடையைப் புனைகிறார். உலகம் முழுவதும் பகல் நேரத்தில் கதிரவன் ஒளி வீசுகிறது. அந்த வெள்ளொளி திசை எங்கும் பரவி நிற்கிறது. அது பகல் அன்று; தியாகப் பெருமான் புனையும் சுத்த வெள்ளைப் பரிவட்டம். சத்துவ குணத்தின் நிறம் வெண்மை. அந்த வெள்ளை நிறமே எங்கும் கப்பிக் கொண்டிருக்கிறதோ? மிக்கு விளங்குகிற பகல் நேரத்தைப் பார்க்கும் போது விசுவரூபராகிய தியாகேசர் வெள்ளைப் பரிவட்டத்தைத் திருமேனி எங்கும் போர்த்துக்கொண்டு விளங்குவதுபோலத் தோன்றுகிறது. எல்லாவற்றையும் இறைமயமாகப் பார்க்கிறவர்களுக்குக் காலமும் இடமும் இறையுருவமாகவே காட்சி அளிக்கும்.

தியாகேசர் பகற்போதையே வெள்ளைப் பரிவட்டமாகப் புனைந்துகொண்டு விளங்குகிறார்.

''எண்திக்கும் ஒளி வீங்கு பகற்போது வெண்படம் ஆம்.''

மெல்லிய வெள்ளாடையை உடுத்துக்கொண்டால் திருமேனி உருவமும் தெரியும். நுண்டுகில் ஆதலின் அங்கங்களின் அழகை மறைக்காமல் காட்டும். பகலில் எல்லாப் பொருள்களும் நன்றாகத் தெரிகின்றன. மெல்லிய வெள்ளாடையை உடுத்துபவர்களின் அங்கங்களின் எழில் அந்த ஆடையினூடே தெரிவது போல, பகல் போதாகிய வெள்ளாடையினூடே தியாகேசர் வடிவமாகிய பிரபஞ்சம்முழுவதும்தெளிவாகத் தெரிகின்றது.

பகல் மறைந்து இரவுவருகிறது. இருள் கப்பிக்கொள்கிறது. அப்போது எந்தப் பொருளும் கண்ணுக்குத் தெரிவதில்லை. உலகம் முழுவதும் கரிய போர்வையால் போர்த்திவிட்டதுபோன்ற தோற்றம் உண்டாகிறது. அந்தக்காட்சி எப்படி இருக்கிறது? தியாகேசர் தம் திருமேனியில் கரிய பரிவட்டத்தைச் சாத்திக் கொண்ட தோற்றத்தையே குமரகுருபரர் காண்கின்றார். எங்கும் தங்கிச் செறிந்த இருளையுடைய அந்த இராப்போது தியாகேசருக்குக் கரியபரிவட்டமாக அமைந்து விடுகிறது.

''தூங்கு இருள் சூழ்
கங்குற் போது கரும் படம் ஆம்.''

கருமை தாமத குணத்தின் அடையாளம். தாமதகுணம் தொழிற்பட்டால்மெய்ப்பொருள் தெரியாது. தாமதகுணமே இருளாகப் பரவியிருக்கும்போது, பொருளின் சொரூபம் தெரிவதில்லை, தியாகேசர் அதையும் தம் உடையாக அணிகிருரராம்.

பகலுக்கும் இரவுக்கும் இடையே அந்திமாலை வருகிறது. அது சிறிது நேரமே இருக்கும். அப்போது செவ்வான்ம் தோன்றும். செவ்வானத்தின் செம்மை எல்லாத்திசையிலும் படர்ந்திருக்கும். அதுவும் தியாகேசப் பெருமானுடைய பரிவட்டமாகத் தோன்றுகிறது; அவர் அணியும் செவ்வண்ண ஆடையாக அது காட்சித் தருகிறது.

செம்பட்மாம்
பொங்குற்ற புன்மாலைப் போது

ஒரு நாளில் பொழுது மாறும் போதெல்லாம் விசுவமே தம் திருமேனியாகக் கொண்டு, வெவ்வேறு வண்ணமுள்ள பரிவட்டங்களை அணிந்து காட்சி தருகிருர் தியாகேசர். பகலானுலும் இரவானுலும் இடைப்பட்ட அந்திமாலையானுலும் நோக்கும் திசையெல்லாம் வேறு காட்சியே தோன்ருமல், வெவ்வேறு வண்ணப் பரிவட்டம் பூண்ட தியாகேசருடைய தரிசனமே கிடைக்கிறது. இந்த அகண்ட தரிசனத்தைக் காணுவதற்குரியப்க்குவம் எல்லோருக்கும் அமைவதில்லை. எப்பொருளையும் இறைவனுகக் காணும் காட்சி உடையவர்களே அவ்வாறு 'முப்போதும் இறைவன் உருவைப் பிரபஞ்சத்திற்கண்டு போற்றி இன்புறுவார்கள்.

பகலைக் கண்டு மகிழ்வதும், இரவைக் கண்டு துயில்வதும், புன்மாலைப்போதில் தளர்வதுமாக இருப்பவர் நாம். பக்தர்களோ அந்த அந்தப் போதில் இறைவனையே வெவ்வேறு கோலத்தில் கண்டு வியந்து போற்றுகிருர்கள்.

ஒருநாளில் மூன்று வேறு மாற்றங்களை நாம் காண்கிரேம், பகலில் வெள்ளொளியையும் அந்திமாலையில் செவ்வொளியையும், இரவில் கருமையையும் காணுகிரேம். சாத்விகம், ராஜசம், தாமசம் என்ற மூன்று குணங்களின் வடிவமாக அவை தோன்றுகின்றன. நாம் வெறும் பகலாகவும் அந்திமாலையாகவும் இரவாகவும் காணுகிரேமேயன்றிவேறு எதையும் நினைப்பதில்லை. பக்தர்களும் ஞானிகளும் அந்த மூன்றிலும் மூன்று குணங்களைக் காண்கிருர்கள். அந்தக் குணங்களை அதிட்டித்து நிற்கும் இறைவனைக் காண்கிருர்கள். பகலில் தெளிந்தும், புன்மாலையில்சோர்ந்தும், இரவில் 'செயலொழிந்துஉறங்கியும்போது போக்குவதுநம்இயல்பு'. வேளைக்கு ஒருகுணம், வேளைக்கு ஒரு செயலாக மாறிமாறி நம்மிடம் அமைகின்றன.

பக்தர்களோ எப்போதும் தம் நிலைமாருமல் இருப்பார்கள். எதைக் கண்டாலும் இறைவனுகவே பாவிப்பார்கள். குற்றங்களிலும் குணங்களிலும் இறைவனைக் காணும் சமதிருஷ்டி உடையவர்கள் அவர்கள்.

''குற்றம்நீ குணங்கள்நீ
கூடலால வாயிலாய்''

என்று சம்பந்தப் பெருமான் பாடவில்லையா?

ஆகவே பொழுது மாறி உலகம் வெவ்வேறு வகையில் தோற்றம் அளித்தாலும் அன்பர்கள் மனம் மாருமல் வேறுபடாமல், எப்போதும் எதிலும் எவ்விடத்திலும் இறைவனையே காணும் இயல்புடையவர்களாக இருக்கிருர்கள்.

பகலிலே இறைவன் தூய வெள்ளாடை பூண்டு காட்சியளிக்கிருன் அவர்களுக்கு; அந்திமாலேயில் செவ்வண்ணப் பரிவட்டம் புனேந்து கோலம் காட்டுகிருன்; இரவில் கரிய ஆடை அணிந்து தரிசனம் தருகிருன். இப்படி முப்போதும், எப்போதும் எங்கும் இறைவனைக் காணும் அன்பர்களுக்கு வேறு காட்சியே தெரிவதில்லை. மற்றவர்களுக்கோ பஞ்ச பூதங்களாகத் தோன்றும் உலகம், பரத்தை அவர்களுக்கு மறைத்துவிடுகிறது.மெய்ஞ்ஞானிகளுக்கோ அது பரத்துள்மறைந்துவிடுகிறது.

''பரத்தை மறைத்தது
பார்முதற் பூதம்
பரத்துள் மறைந்தது
பார்முதற் பூதம்''

என்று இந்த வேறுபாட்டைத் திருமூலர் சொல்கிருர்.

வெவ்வேறு வண்ணம் காட்டும் பொழுதுகளையே தியாகேசப் பெருமானுடைய பரிவட்டங்களாகக் காணும் காட்சியைப் பாடல் சொல்கிறது.

தேங்குபுகழ் ஆரூர்த் தியாகேசர்க்கு
எண்திக்கும் ஒளி
வீங்கு பகற்போது வெண்படமாம்;-
தூங்கு இருள்சூழ்
கங்குற் பொழுது கரும்படமாம்;
செம்படமாம்
பொங்குற்ற புன்மாலேப் போது.

புகழ் தேங்கும் இடமாகிய திருவாரூரில் எழுந்தருளியுள்ள தியாகேசப்பெருமானுக்கு, ஒளிமிக்கு விளங்கும் பகற்பொழுது வெண்ணிறமுள்ள பரிவட்டமாம்; செறிந்த இருள்சூழ்ந்த இராப்போது கருவண்ணப் பரிவட்டமாம்; இடையிலே வந்து பொங்கி நிற்கும் சிவப்பையுடைய அந்திமாலேப்போது செவ்வண்ணப் பரிவட்டமாம்.

தேங்குபுகழ் என்பதைத் தியாகேசருக்குரிய அடையாகவும் கொள்ளலாம்; தியாகத்தால் வந்த புகழை உடையவர் அவர். எண்திக்கு என்பவை பெருந்திசை நான்கும் கோணத்திசை நான்கும். எண்திக்கு என்ருலும் எவ்விடத்தையும் குறிப்பதாகக் கொள்ளவேண்டும். ஒளிவீங்கு கதிரவனுடைய ஒளி மிக்கு அமையும். படம் - ஆடை, தூங்கு - தங்கும்; யாவரும் உறங்குவதற்குரிய இருள் என்றும் சொல்லலாம். சூழ்தல், எங்கும் பரவியிருத்தல். கரும்படம் - கரிய வண்ணப் பரிவட்டம். பொங்குற்ற பால், ஒருசமயம் பொங்கிப் பின்பு அடங்குவதுபோலச் சிறிது நேரம் வந்து போவது என்பதைக் குறிப்பது. புன்மாலே - அற்பமான அந்திமாலே; பகலில் அளவையும் நோக்கும் போது அந்திமாலேயின் அளவு சிறிதாதலின் புன்மாலே - செவ்வண்ணம் கொண்ட அந்திமாலே என்றும் சொள்ளலாம்; புன்மை—சிவப்பு. தியாகேசர் முப்போதும் வெவ்வேறு பரிவட்டங்களே அணிந்து கோலம் காட்டுகிருர் என்பது கருத்து.

திருவாரூர் நான்மணிமாலேயில் வரும் ஆருவது பாடல் இது.

# “ பெயர்கள் பத்துடைய மன்னவன் ”

ந. ரா. முருகவேள், M. A., M. O. L.,

## முன்னுரை:

திருஞானசம்பந்தப் பெருமான், எதனையும் திட்டவட்டமாகத் தெளிவுறுத்தி, அறுதியிட்டு உறுதியாகக் கூறும் இயல்புடையவர். அவர் வாழ்ந்திருந்த கி. பி. 7ஆம் நூற்ருண்டில், இராமாயண பாரதக் கதைகள், நமது தமிழகத்தில் பெரிதும் பரவியிருந்தன. ஆதலின் திருஞானசம்பந்தரும், திருநாவுக்கரசரும், சிவபெருமானின் திருவருட்டிறத்தினை விளக்குவதற்கு, இராமாயண பாரதக் கதைகளைத் தமது திருப்பாடல்களில், ஆங்காங்கே இடையிடையே எடுத்துக் குறிப்பிட்டருளுவர்.

## திருஞானசம்பந்தர்:

சிவபெருமான் அருச்சுனனுக்கு அருள்புரிந்தமை, பாரதக் கதைகளுள் மிகவும் புகழோங்கியது; பலரும் அறிந்தது. ‘‘ அடுத்து ஆனை உரித்தானை அருச்சுனற்குப் பாசுபதம் கொடுத்தானை ’’ என்றும், “அருச்சுனற்கு அம்பும் வில்லும் கொடுத்தார் குறுக்கை வீரட்டனரே” என்றும், நாவுக்கரசர் நவின்றிருத்தல் காணலாம். அம்முறையில், திருஞானசம்பந்தரும் சிவபெருமான் அருச்சுனனுக்கு அருள்புரிந்த பாரதக் கதையினை, ஒரோ வழி தம் பாடல்களில் குறிப்பிட்டுப் பாடியுள்ளார். திருக்கோகரணம், திருச்சேறை பற்றிய திருப்பதிகங்களில்,

‘‘நேசமில் மனச்சமணர் தேரர்கள் நிரந்தமொழி,பொய்கள் அகல்வித்து
ஆசைகொள் மனத்தை அடியார்அவர் தமக்கருளும் அங்கணன்இடம்;
பாசம தறுத்து, அவனியிற் பெயர்கள் பத்துடைய மன்னன் அவனைக்
கூசவகை கண்டு, பின் அவற்கருள்கள் நல்கவல கோகரணமே!
—திருக்கோகரணம், 10 (1)

மத்தரம் உறுதிறல் மறவர்தம் வடிவுகொடு, உருவுடைப்
பத்தொரு பெயருடை விசயனை அசைவுசெய் பரிசினல்,
அத்திரம் அருளும்நம் அடிகள தணிகிளர் மணியணி
சித்திர வளநகர், செறிபொழில் தழுவிய சேறையே
-திருச்சேறை, 6 (2)

(‘பத்தொருபெயர் ’என்பதனை ‘ ஒருபத்துப் பெயர் ’ எனக் கொள்ளுக)

என்னும் பாடல்கள் இரண்டில், திருஞானசம்பந்தர் சிவபெருமான் அருச்சுனனுக்கு அருள்புரிந்த செய்தியினைப் பற்றிக் குறிப்பிடுங்கால், அருச்சுனன் பத்துப்பெயர்கள் உடையவன் என்று திட்டவட்டமாகத் தெளிவுறச் சுட்டுகின்றார். இங்ஙனம் இனைத்தெனத் தெளிவுறத் தொகை குறிப்பிட்டு, இரண்டிடங்களில் திருஞானசம்பந்தப் பெருமான் பாடியிருக்கும் .திறம், நம் சிந்தனைக்கும் வியப்பிற்கும் உரியதாகத் திகழ்கின்றது.

## அருச்சுனனின் பெயர்கள்:

திருஞானசம்பந்தர் குறிப்பிட்டபடி, அருச்சுனனுக்குரிய பத்துப் பெயர்கள் யாவையாக இருக்கலாம்? என்று அறியப் பெரிதும் ஆர்வம் எழுந்தது. அதனால் வில்லிபாரதத்தினை எடுத்துப் பலகால் பலமுறை இடையிடையே பயில நேர்ந்தது. அதன் பயனாகப் பின்வரும் பத்துப் பெயர்களை அருச்சுனனுக்கு உரியனவாகக் கொள்ளலாம் எனத் தோன்றியது. அவையாவன: 1. அருச்சுனன், 2. பார்த்தன், 3. விசயன், 4. பாகசாதனி, 5. சவ்வியசாசி, 6. பற்குனன், 7. தனஞ்செயன், 8. கிரீடி, 9. சுவேதவாகனன், 10. காண்டீபன் என்பன. கௌந்தேயன் - பாண்டவன் - பரந்தபன் – குடாகேசன் என வேறு பல காரணப் பெயர்களும், அருச்சுனனுக்கு உரியனவாக, நூல்களில் ஆங்காங்கே இடையிடையே வருகின்றனவாயினும், அருச்சுனனுக்கே உரிய காரணச் சிறப்புப் பெயர்களாக, மேற்குறித்த பத்துப் பெயர்களையே கொள்ளுதல் பொருந்தும் எனலாம். அந்தப் பத்துச் சிறப்புப் பெயர்களும், அவைகளின் பொருள்களும் வருமாறு.

| | |
|---|---|
| 1. அருச்சுனன் | – தூய செயலினன். |
| 2. பார்த்தன் | – பிரதை (குந்தி)யின் புதல்வன். |
| 3. விசயன் | – போர்களில் வெற்றி கொள்பவன். |
| 4. பாகசாதனி | – இந்திரன் (பாகசாதனன்) புதல்வன். |
| 5. சவ்வியசாசி | – வலக்கையால் மட்டுமின்றி இடக்கையாலும் கணைகள் விட வல்லவன். |
| 6. பற்குனன் (பங்குனன்) | – பங்குனி மாத உத்தர நட்சத்திரத்தில் பிறந்தவன். |
| 7. தனஞ்செயன் | – எல்லா அரசர்களையும் வென்று, இராசசூய யாகத்திற்குத் தனம் திரட்டி வந்தவன். |
| 8. கிரீடி | – இந்திரனால் கிரீடம் சூட்டப் பெற்றவன். |
| 9. சுவேதவாகனன் | – வெள்ளைக் குதிரையை உடையவன். |
| 10. காண்டீபன் | – காண்டீபம் என்னும் வில்லை உடையவன். |

முடிவுரை:

அருச்சுனனுக்கு உரிய பத்துப் பெயர்களேயும் ஒரு வகையில் தொகுத்துக் கூறுவது போல வில்லிபுத்தூரார் பாரதத்தில் பின் வரும் செய்யுள் ஒன்று காணப்படுகின்றது. அப்பாடலேயும், ஈண்டு நாம் உணர்ந்து இன்புறுதல் நலம்.

பார்த்தன்[1], அருச்சுனன்[2], கரியோன்[3], விசயன்[4],
பாக சாதனி[5], சவ்விய சாசி[6], பற்குனன்[7], பார்
ஏத்து தனஞ்செயன்[8], கிரீடி[9], சுவேத வாகனன்[10],
எனும்நாமம் படைத்தபிரான், யாழோர் இன்பம்
வாய்த்த இதழ்அமுத மொழிப்பேதை, தாதை
மனேயிருக்கத், திருவழுதி வளநாட் டுள்ள
தீர்த்தம் முழுவதும் ஆடிஅன்பால் தென்பால்
திருமலேயும் கைதொழுது சிந்தித் தானே

- அருச்சுனன் தீர்த்தயாத்திரைச் சருக்கம், 44.



# திருப்பணி கொள்ளும் திருநாகேச்சரம்

திருநாகேச்சரம், சேக்கிழாருக்குத் திருவடிஞானம் நல்கிய திருத்தலம்; ஆன்மார்த்த தலம்; அவரது திருப்பணி பெற்ற தலம். சம்பந்தசுவாமிகளும், அப்பரடிகளும் வழிபட்டுத் தேவாரப் பாமாலே சூட்டப்பெற்ற இத்திருத் தலத் திருக்கோயில் பல லட்சம் செலவில் திருப்பணிகள் செய்யப்பெற்றுக் கும்பாபிஷேகம் செய்விக்கப்பெறவுள்ளது.

திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடம் அதிபர் ஸ்ரீ-ல-ஸ்ரீ **காசிவாசி எஜமான் சுவாமிகள்** அவர்களேப் புரவலராகவும், திருமுருக கிருபானந்தவாரியார் அவர்களேத் தலேவராகவும் கொண்ட திருப்பணிக்குழு அமைந்துள்ளது.

மெய்யன்பர்களின் காணிக்கைகள் வரவேற்கப் படுகின்றன.

அனுப்பவேண்டிய முகவரி:—

செயல் அலுவலர்,
**ஸ்ரீநாகநாத சுவாமி திருக்கோயில்,**
திருநாகேச்வரம், (தஞ்சை மாவட்டம்.)

# திருத்தல யாத்திரை 11

வித்துவான் வே. மகாதேவன், M.A.,




## திருநின்றியூர்.

'இறைவனை நினை' என்பர் சமயச் சான்றோர்கள். எவ்வாறு நினைப்பது? இன்பமும், துன்பமும் மாறி மாறி வருவதுதானே வாழ்க்கை. இறைவனின் நினைவு இன்பம் வரும்போது வரவேண்டு வதா? துன்பம் வரும்போது தோன்ற வேண்டுமா? என்னும் சந்தேகம் எழலாம். இருபோதும் வரவேண்டும். இன்பம் வரும் போது 'அவனால் வந்த ஆக்கம் அது' என்று அறிந்து ஆண்டவன் மீது அன்புகொள்ள வேண்டும். துன்பம் வரும்போது அவனே நம் துன்பம் துடைக்கும் மாமருந்து என்று அறிந்து அஞ்சி வழிபட வேண்டும். 'நலம் தீங்கிலும் உன்னை மறந்தறியேன்' என்று வாழப் பழக வேண்டும் என்று கூறுகிறது சமய நெறி.

'இறைவனை நினை' என்றதும் இறைவனின் கோலங்களோ பல; அவன் அமர்ந்து அருள்பாலிக்கும் தலங்களோ மிகப்பலவாக இருக் கின்றனவே! எதை நினைப்பது? என்று கருதலாம். இதற்குத் திரு நாவுக்கரசர் விடை தருகிறார்.

''நெஞ்சே! திருநின்றியூர் என்றொரு தலம் இருக்கிறது. அங்கேகோயில் கொண்டிருக்கிறார் பிறை சூடிய பெம்மான். அத்தலத் தைச் சுற்றியமைந்த பெருமதிலில் கூடி அவன் அருள்வேண்டி அவன் தாளை வணங்குகிறார்கள் வானோர் கள். அந்நின்றியூரை நினை! உய்தி பெறலாம்'' என்கிறார்.

"அஞ்சி யாகிலும் அன்புபட்டாகிலும்
நெஞ்சம் வாழிநினை நின்றியூரை நீ"

என்பது நாவுக்கரசர் வாக்கு. ''நின்றியூரைப் பற்றினாரை வினை பாவம் பற்றா'' "உரையினால் தொழுவார் வினை ஓயும்" என் கிறார் அவர். இவ்வாறு திருநாவுக் கரசர் போற்றும் இத்தலம் 'திரு நின்றியூர்'. இது காவிரித் தென் கரைத் தலங்களில் 19-ஆவது தலம்.

இத் திருநின்றியூர் மாயூரம் — சிதம்பரம் சாலையில் மாயூரத்தில் இருந்து ஏழுகல் தொலைவில் உள் ளது. திருநின்றியூர் பேருந்து நிறுத்தத்தில் இறங்கி, அங்கிருந்து 'சேமங்கலம்' செல்லும் கிளைவழி யில் ஒரு பர்லாங்கு சென்றால் இடதுகைப் பக்கம் திருநின்றியூர்ச் சிவாலயம் உள்ளது.

திருநின்றியூர் என்னும் இத் தலத்தின் பெயர் ஒரு காரணப் பெயராகும். செல்வத்துக்குரிய தெய்வம் ஸ்ரீ தேவி - திருமகள். இவள் திருநின்றியூரில் கோயில் கொண்டுள்ள சிவபெருமானை வழிபட்டாள்; ''முழுமுதல்வா! உலகில் உள்ள மக்கள் என்னைச் செல்வத்துக்குரிய அதிதேவதை யாகக் கருதவேண்டும். நான் என் கணவனுன விஷ்ணுவின் நெஞ்சில் நீங்காது இடம்பெறும் நிலைபெற வேண்டும் என வேண்டினள். வேண்டியதெல்லாம் தந்தான் இறைவன். செல்வக்கடவுளான அவள் விஷ்ணுவின் மார்பில் 'ஸ்ரீ வத்ஸம்' ஆனுள். இவ்வாறு திருமகள் வழிபட்டமையால் இத் தலம் 'திரு'நின்றவூர் எனப்பட லாயிற்று என்பர். 'லக்ஷ்மிபுரம்' என்பது ஊரின் வடமொழிப் பெயர். 'லக்ஷ்மி புரேச்வரர்' என்பது இறைவன் திருப்பெயர்.

சிலர் வேருெரு காரணமும் சொல்கிருர்கள். ''சோழமன்னன் ஒருவன் தினந்தோறும் திருவிளக் கிட்டு இறைவனை வழிபட்டான். ஒருநாள் அவன் கொண்டுவந்த திரி எரியாமல் போயிற்று ; வழி பாட்டின் நடுவில் நின்றது. உடனே சிவலிங்கத்திலிருந்து ஒரு சோதி தோன்றியது ; ஒளி பரப்பியது; வழிபாடு தொடர வழி செய்தது. எனவே இப்பகுதி 'திரி'நின்றவூர் எனப்பட்டது. அப்பெயர் திருநின்றவூர் என்று மாறி வழங்குகிறது'' என்பது கர்ண பரம்பரை. இலக்கியங்கள் 'நின்றியூர்',. 'திருநின்றியூர்' என்று ஊரைக் குறிக்கின்றன. சுந்தரர் ஓரிடத்தில் 'செல்வத் தென் திருநின்றியூரன்' என்பர்.

தேவார மூவர் காலத்தே மிக உயரியநிலையில் இருந்தது இத் தலம் நாற்புறமும் நெல் வயல் கள்; அவற்றின் நடுவில் சோலை கள்: யாழ் ஒலியையும் வண்டின் ஒலியையும் கேட்டுக் குயில்கள் இசை பாடும் மரங்களின் நிழல்; சூழ அமைந்த நீலமலர்ப் பொய்கை; பொன் மதில் வேலி; இவற்றின் நடுவில் கோயில் கொண்டெழுந்தருளி இருந்தான் இறைவன், ஆனுல் இன்றோ ... ... ஊரின் வெளியே அமைந்துள்ளது இவ்வாலயம்.

கோபுர வாயிலின் வழியே உட் செல்கிருேம். இவ்வாயில் அண்மைக்காலத்திய திருப்பணி. நுழைந்தவுடனேயே தூய்மை யான பிரகாரம் நம் கண்ணில் படுகிறது; இவ்வாலயம் திருத் தருமையாதீனத்தின் அருள்ஆட்சி யிலமைந்த தேவஸ்தானங்களில் ஒன்று என்பதனைக் காட்டி விடு கிறது.

சிறு பலிபீடம். அடுத்தமைவது நந்தி மண்டபம். நந்தி எழுந்தரு ளியுள்ள கல்மேடையில் குமுதப் படையில் இருதுண்டுக் கல்வெட் டுக்கள் இருக்கின்றன. இத் துண்டுகள் மூன்றும் குலோத்துங்க சோழன் காலத்தைச் சேர்ந்த ஒருகல்வெட்டின் பகுதிகளாகும்.

நிலமட்டத்தைவிடப் பெரிதும் உயர்ந்த பகுதியில் இச்சிவாலயம் அமைந்துள்ளது. இவ்வாலய அமைப்பினைப் பார்த்தவுடனேயே இக்கோயிலில் அடிக்கடித் திருப்பணிகள் நடந்திருக்கின்றன என்று சுலபமாக அறியலாம். பழைமைச் சுவடே இல்லை. 'நகரத்தார் கலைப்பாணி'யில் அமைந்துள்ளது. இருதூண்களால் தாங்கப்படும் முகமண்டபம், பெருமண்டபம், அர்த்த மண்டபம், கருவறை என்பன ஆலயத்தின் பகுதிகள்.

முதல்வாயிலில் இரண்டு பெரிய துவார பாலகர்கள் இருக்கின்றனர். இத்திருவுருவங்கள் மிகப் பழையன. இக்கோயில், சோழர் காலத்தின் இடைப்பகுதியிலேயே கருங்கல்லால்கட்டப்பட்டிருந்தது என்பதனைச் சொல்லாமல் சொல்லும் சுவரோவியங்கள் இவை. இங்குள்ள சுவர்ப்புழை ஒன்றில் காட்சி தருகிறார் கஜானனர். அவர் உருவழகு நம் கண்கொள்ளாக் காட்சிகளுள் ஒன்றாகும்.

முதலில் அமையும் பெருமண்டபத்தின் வடக்குப்பக்கத்தில் தென் முகமாக எழுந்தருளி இருந்து அடியவர்க்கு அருள்பாலிக்கிறாள் அன்னை. 'உலகநாயகி' என்பது அம்மையின் திருநாமம்.

கருவறையில் அமர்ந்தருளி அருள்பாலிக்கிறார் கண்ணுதற் கடவுள். இவரே "மகாலட்சுமி நாதர்", திருமகள் வழிபட்டு உய்ந்த 'லட்சுமிபுரீச்வரர்' ஆவர். இவரை வழிபட்டோர் - மாறிலா வாழ்வு உற்றோர் மிகப் பலர்.

கதிரவன் எழுவதற்கு முன்னே காமதேனு எழும், இங்கு வரும்; நின்றியூர்ச் சிவனைத் தன் மடிக் கலசங்களால் பால் சொரிந்து வழிபட்டுப் பரவும். இப்பழக்கத்தால் பரமனருளுக்குப் பாத்திரமாயிற்று அப்பசு.

இந்திரன் ஒருவன் நின்றியூர்ச் சிவனை வழிபட்டான். மகிழ்ந்தார் இம்மாதேவர்; 'வானநாட்டை நீ ஆள்க' என்று வரமளித்தார். அவன் தேவலோக அரசனானான்.

'அகத்திய முனிவர்' அருச்சித்த திருவுரு இது. 'ஐராவதம்' இப் பெருமானை வணங்கியது; சாப விமோசனம் பெற்றது; வானநாடு செல்லும் நிலையுற்றது.

தாயைத் தடிந்த பாவத்தில் சிக்குண்டான் பரசுராமன். பாவத்தின் நீங்க வழிதேடினான்; இப் பரமனை நாடினான்; பக்தி கொண்டான்; பரவித்துதித்தான். பரசுராமற்குப் பாதம் காட்டி ஆட்கொண்டார் இவ்வேத விழுப்பொருள். மகிழ்ந்தான் பரசுராமன். சிவபெருமானுக்கு 360 வேலி நிலத்தை 300 வேதியர்களோடு தந்தான்; 'நின்றியூரும் நினக்கு' என நின்றியூரை இறைவனுக்கு உரிமையாக்கினான் என்பது புராண வரலாறுகள்.

இவை மட்டுமா? நம் சமய குரவருள் முதல் மூவரும் இம்மூவா முதல்வனைப் போற்றிப் பரவி இருக்கிறார்கள்.

நின்றியூர் இறைவனின் நீள் கழல்களை இறைஞ்சினர் சம்பந்தர். 'சூலம் படை' என்று துவங்கும் திருப்பதிகம் பாடினர்.

திருநாவுக்கரசர், 'கொடுங்கண் வெண்டலை' என்னும் திருக்குறுந் தொகை இசைத்து இவ்விறைவனை வணங்கினர்.

சுந்தரர் நின்றியூர் இறைவனை நேயத்துடன் வணங்கினர்; ஒன்றிய அன்பு உள்உருகப் பாடினர். அவர் பாடிய பதிகங்கள் இரண்டு. ஒன்று 'திருவும் வண்மையும்' என்றும் மற்றொன்று 'அற்றவனாரனடியார்' என்றும் துவங்கும்.

அடியவர் வேண்டுவனவற்றை எல்லாம் அளிக்கக் கூடியவன் இவ் அரன். 'ஒரு மண்டலம் வழிபட்டால் கேட்டதெல்லாம் கொடுக்கிறான்' என்று இன்றும் சொல்கிறார்கள் எண்ணற்றோர். நின்றியூர் இறைவனை வழிபட்டவர்களின் அச்சம் அழியும்; பாவம் நீங்கும்; கேடுகள் அழியும்; நோய்கள் அகலும் - இது நிச்சயம்.

''அச்சம் இலர் பாவம் இலர்
கேடும்இலர் அடியார்
நிச்சம்உறு நோயுமிலர்
தாமும் நின்றியூரில்......
... ... ... ... ...
பச்சம்உடை அடிகள்திருப்
பாதம் பணிபவரே''

என்பது சம்பந்தர் அருள்வாக்கு.

பெருமண்டபத்திலிருந்து திருச்சுற்றுக்கு வரலாம். கருவறையின் மேற்புறம் நகரத்தார் கலைப்பாணியிலமைந்த இருதளங்களுடைய ஸ்ரீவிமானம் காட்சி தருகிறது. கருவறைப் புறைகளில் பழைய திருவுருவங்கள் இல்லை. புத்துருவங்கள் எழுந்தருள்விக்கப்பட்டுள்ளன.

பிரகாரத்தினுள் தென்மேற்கே உள்ள சுற்றாலயம் 'செல்வப் பிள்ளையார்' கோயில். வடமேற்கிருப்பது 'முருகன் கோயில்'. இரண்டையும் மண்டபம்போன்ற பிற்காலத்து இணைப்பு இணைக்கிறது. செல்வ விநாயகர் கோயிலுக்கு வெளிப்புறம் 'சிவபெருமானின் திருவுருவம்' ஒன்று உள்ளது. இவ்வுதிரிச்சிலை சோழர் காலத்தது. மணற்கல்லாலானது; முன்பொரு காலத்தில் கருவறையின் பின்புறையில் இருந்த 'லிங்கோத்பவர்' ஆதல் கூடும்.

இணைப்பு மண்டபத்தில் இறையுருவங்கள் பல உள்ளன. 'ஜமதக்னி ஈச்வரர்' 'பரிகேச்வரர்' என்னும் இரு லிங்கங்கள் முதலில் உள்ளவை. இவை ஜமதக்னியால் பூசிக்கப்பட்டவை என்பர். அடுத்துப் 'பரசுராமர் வழிபட்ட சிவலிங்கம்' உள்ளது. இங்குள்ள திருவுருவங்களில் குறிப்பிடத்தக்கது முருகனின் திருவுருவம். இக் கார்த்திகேயர் உருவம் மிகத் தொன்மையான கலையமைப்பு உடையது. இதன் அணிகளும், முடியலங்காரமும் தொல்லியல் ஆய்வாளருக்குப் பெருவிருந்து ஆகும்.

இப்பகுதியிலும், நந்திமண்டபத்திலும் ஆகப் பதினைந்து கருங்கற் துண்டுகளில் கல்வெட்டுக்கள்

காணப்படுகின்றன. இவை ஏதோ ஒரு கல்வெட்டின் துண்டுப் பகுதிகளாகும். கி. பி. 12—13-ஆம் நூற்றுண்டுக்குரியவை. சிலதுண்டுகள் தலைகீழாகவும் வைக்கப்பட்டுள்ளன. இவை இக்கோயிலில் இருந்த கல்வெட்டின் துண்டுகளா? வேறு ஏதோ கோயிலின் கல்வெட்டுத் துண்டுகளா? என்று கண்டுபிடிக்க முடியவில்லை. நந்தி மண்டபக் கல்வெட்டுத் துண்டில் '...... உலகுடைய பெருமாள்...' என்று உள்ளது. இட அமைதி கொண்டு நோக்கினுல் 'இது அரசன் பெயரில்லை' என்று தெரிகிறது. இத்தலத்திறைவி 'உலகுடை நாயகி' அல்லவா? எனவே இது இக்கோயில் சாசனமாக இருக்கலாமோ என்று நினைக்க இடம்இருக்கிறது.எவ்வாருயினும் கல்வெட்டுத் துண்டுகள் காணப்பெறும் ஆலயப் பகுதிகள் கி. பி. 14ஆம் நூற்றுண்டுக்குப் பிற்பட்டவை என்பது உறுதி.

திருக்கோயிலைச் சுற்றித் தீர்த்தம் அமைந்துள்ளது. முப்புறமும் அமைந்துள்ள இத் தீர்த்தம் 'மாலைபோல' அமைந்தமைக்கு ஒரு காரணம் கூறுகிருர்கள். ''கோச்செங்கணுன்' என்னும் சோழன் 'விருதுசன்மன்' என்னும் அந்தணனைக் கொன்ருன்; அப்பிரமகத்தியில் இருந்துநீங்கச் சிதம்பரம் சென்று அர்த்தசாம தரிசனம் காணும் வழக்கம் மேற்கொண்டான். இடையில் உள்ள இத் தலத்தின் பெருமையை அறிந்தான். ஆட்டிடையன் ஒருவன மூலமாகப் பசு, பால் சொரிந்து வழிபடுதலை அறிந்த அரசன் அவ்விடத்தை அகழ்வித்தான். ஒன்றும் வெளிப்படவில்லை. தானே பாறையை எடுத்துக் குத்திஞன். பாறைபட்ட இடத்திலிருந்து இரத்தம் பீரிட்டுத் தெறித்தது; மாலைபோல வீழ்ந்தது. அக்குருதியே புண்ணிய தீர்த்தமாயிற்று. கோச்செங்கணுன் இங்குக்கோயில் எடுப்பித்தான்'' என்று செவி வழியாகக் கூறுவர். சிவபெருமான் இலிங்கத் திருமேனியின் உச்சியில உள்ள குழிவினை இதற்கு ஆதாரமாகக் காட்டுவர்.

இத் தீர்த்தத்தை 'நீல தீர்த்தம்' என்று அபிதான சிந்தாமணி கூறும். திருஞானசம்பந்தர் 'நீலம் மலர் பொய்கை நின்றியூர்' என்று இதனையே குறித்தனர் எனலாம். சிலர் இதனை 'லட்சுமி தீர்த்தம்' என்பர். "இதன் வட பகுதியாகிய வடக்குக் குளம் 'சஷ்டி அஷ்ட கோடித் தீர்த்தம்.' இங்கு ஜமதக்னி நீராடினுர். இங்குப் புனலாடும் பக்தர்களின் பிணிகள் அனைத்தும் நீங்கும். தென்புறம் உள்ள குளத்தில் நீராடினுல் யம வாதனை அகலும்' என்பர்.

இக்கோயிலில் இரண்டேவேளை மட்டும் நாள்வழிபாடு மிகச்சிறந்த முறையில் நடைபெறுகிறது. சிறப்பு வழிபாடில்லை. 60 ஆண்டுகட்கு முன்புவரை சித்திரைப் பெருவிழா நிகழ்ந்துள்ளது.

தருமை ஆதீனத்தின் 24-ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்களால் 7-4-1951-இல் இத் திருக்கோயிற்கு மகா கும்பாபிடேகம் செய்விக்கப் பெற்றுள்ளது. இத்திருக்கோயில் திருத்தருமை ஆதீனத்தின் அருளாட்சியில் சிறந்த முறையில் பரிபாலிக்கப்பட்டு வருகிறது.

நின்றியூர் உறை நின்மலனைத் தொழுதார் வினை நீங்கும் என்பதில் ஐயமில்லை.

தசை நிறைந்து மென்மையோடு சமமாக விளங்கும் உள்ளங்கால்களைப் பெற்றவள் நலமடைவாள். அழகிய மாந்தளிர் போலச் சிவந்து பொன்னிறம் பெற்று எப்போதும் வியர்வை அரும்பாது வெப்பமாய் இருக்கும் உடலைப் பெற்றவளுக்குச் செல்வமுண்டாகும். பாதிரி, குவளை, தாமரை, மல்லிகை, சண்பகம் ஆகிய இவற்றின் நறுமணங்களைப் போல உடலின் மணத்தைப் பெற்றவளும், குயில், கிளி, யாழ் ஆகிய இவற்றின் ஒலிபோல இருக்கும் சொற்களைப் பெற்றவளும் செல்வ முடையவளாவள்.

இவ்வாறு காந்திமதியின் கூந்தலிலிருந்து காலின் வரையுள்ள உறுப்புக்களின் இயல்கள் அனைத்தையும் வாக்கின் செல்வனாகிய வியாழ பகவான் நூலுணர்வால் ஒருசேர ஆராய்ந்து கூறி, அவ்வணங்கிற்கு ஒப்பானவர் மண்ணுலகிலும் விண்ணுலகிலும் இல்லை' என்று கூறினான். அதனைக் கேட்ட யாவரும் மனங்களித்தனர்.

### திருமணம் நடைபெறுதல்

பிறகு, உக்கிரகுமாரர் அங்குநின்றும் எழுந்து அட்டமங்கல வரிசைகள் சிறக்க, யானையின் மீது கொண்டுவரப் பெற்ற வையை யாற்றின் நீரிலே ஸ்நானம் செய்து, திருமணக் கோலங் கொள்ளத் தொடங்கினர்; மலர்ந்த மலர்மாலைகளைச் சூடி, மான்மதங் கலந்த சந்தனத்தை அணிந்து, முத்தாபரணங்களைப் பூண்டு, ஒளிவீசும் நிறை மதியினைப்போல் வந்து திருமண மண்டபத்தினில் இடப்பட்ட பூந் தவிசின்மேல் சங்கங்கள் ஒலிக்க ஏறி அமர்ந்தார். அப்போது மணப் பெண்ணாகிய காந்திமதியினை நறுமணம் கமழும் நீரினால் ஆட்டிப் பொன்னுடை தரித்து, அரிய ஆபரணங்களைப்பூட்டி, நம்பியின் வலது புறத்தில் அழகுபெற அமரச் செய்தனர். சோமசேகரன் தன் மனைவி யுடன் எழுந்துவந்து உக்கிரகுமாரரையும், காந்திமதியையும் சிவபெருமா னாகவும் உமாதேவியாகவும் கருதி, நறுநீராலே உக்கிரகுமாரரின் திரு வடிகளை விளக்கி, மணங்கமழும் மலர்களைச்சூட்டிப் பாலும் பழமும் ஊட்டிக் காந்திமதியின் கையினைப் பிடித்து உக்கிரகுமாரர் கையில் வைத்துத் தேவர்கள் அறிய வேத மந்திரங்கூறி, "சூரிய குலத்தைச் சேர்ந்த சோமசேகரனாகிய நான், திங்கள் குலத்தை விளக்கும்படி வந்தருளிய சுந்தரபாண்டியரின் திருப்புதல்வரும் உலகாளுபவருமாகிய உக்கிரகுமார பாண்டியருக்கு என்னுடைய புதல்வியாகிய காந்தி மதியை இப்பொழுது மனமுவந்து கொடுத்தேன்" என்று தாரை வார்த்துக் கொடுத்தான்.

### வரிசைகள் வழங்கல்

அதன்பிறகு, முத்துவடம் பூட்டிய வயிரத்தால் செய்யப்பெற்ற ஊசல் (ஊஞ்சல்) ஐந்தும், பதம்செய்த பஞ்சணை பத்துடன் அன்னத்தின் தூவிபெய்த மெல்லிய ஆடையால் அமைந்த அணை (மெத்தை) பத்தும், பாவை விளக்கு எட்டும், உணவு சமைப்பதற்குரிய பொற் பாத்திரங்கள் நூறும், மணிகள் பதித்து இழைத்த களாஞ்சிகள் ஏழும், பொற் காம்புகளையுடைய சாமரைகள் எட்டும், பசும்பொற் கிண்ண வரிசை சூழ்ந்து விளங்க நடுவே பொற்காலுடன் கூடிய மாணிக்கப் பாத்திரங்கள் நூறும், முத்தாபரணங்கள் வைக்கும் பேழைகள் முந்நூறும், ஆயிரம் பொன் விலையுடைய மெல்லிய வெண்மையான துகில், அரிய பட்டாடை ஆகிய இவற்றை வெவ்வேருக வைக்கப் பெற்ற பேழைகள் முந்நூறும் சித்திரப்பாவையை ஒத்தவர்களாகிய ஏவல்செய்யும் சேடியர் எழு நூற்றைவரும், விளைநிலங்கள் நிறைந்த பெரிய ஊர்கள் மூன்றும், செம்பொன் இரண்டுகோடியும், பிறபொருள்கள் எண்ணில்லாத அளவுமாகத் தன் பெண்ணுக்குச் சோமசேகர மன்னன் வரிசைகளாக (சீதனங்களாக) வழங்கினுன்.

இசைக் கருவிகள் முழங்கின. தேவர்கள் கற்பக மலர்மழை பொழிந்தனர். வேள்வித்தீ வலம் சுழித்துக் குதித்து எழுந்தது. மகளிர் வாழ்த்துப் பாடல்கள் பாடினர். திருமணத்தைக் கண்டவர்களின் கண்கள் அனைத்தும் நற்பேறு பெற்றன. அந்தணர்கள் செந்தீ வளர்க்க, இன்னிசைக்கருவிகள் முழங்கக் கடம்பமலர் மாலை அணிந்த முருகக் கடவுளை யொத்த உக்கிரகுமாரர், காந்திமதிக்கு மங்கல நாண் பூட்டி வளையல் அணிந்த சிவந்த கையினைப்பற்றி மற்றைய மணவினைகள் அனைத்தும் வேத விதிப்படி சிறப்புறச் செய்து முடித்தனர்.

### நகர் வலம் வருதல்

பிறகு திங்களும் உடுக்கணங்களும் தவழ்ந்து செல்லும் வானின் கண் உயர்ந்து விளங்கும் அழகிய மாடங்கள் நிறைந்த மதுரைத் திரு நகர் வீதியினை மணமக்கள் வலம் வந்தனர். மின்னலைப்போல் ஒளி வீசும் வளையல்களை அணிந்தவர்களும், கால்களுக்குச் செம்பஞ்சுக் குழம்பு ஊட்டியவர்களும், அழகிய மணிக்கலன் பூண்ட மார்பினையுடையவர்களும், ஒலிக்கும் அழகிய மேகலையை அணிந்தவர்களும், கூந்தலில் மாலையை அணிந்தவர்களுமாகிய மகளிர் தங்கள் கண்களும் மனமும் தொடர்ந்து தூது செல்லுதல்போல முன்னே செல்ல ஊர் வலத்தின் பின் சென்றனர். உக்கிரகுமாரர் தமது பவனியைத் தொடர்ந்து தரிசித்து வரும் மெலிந்த இடையையுடைய மகளிரிடம்

கருணை கொண்டு, அவர்களின் இடையின் கனத்தைக் குறைப்பவரைப் போல, மேகலையைக் கவர்ந்தார்; தோளின் கனத்தை ஒருசேரக் குறைப்பவர்போல வளையல்களைக் கவர்ந்தார்; உள்ளத்தின்கண் மிக்க பொறையைக் குறைப்பவர் போலக் கற்பினைக் கொள்ளை கொண்டார். பிறையை அணிந்த சடையை மறைத்து வந்தருளிய சுந்தர பாண்டியருடைய குமாரர், யானையின் பிடரியில் இளமை யாகிய ஆண் சிங்கம் ஏறி வருவதைப்போல் வேற்று மன்னரின் படைசூழத் தொடர்ந்து வருகின்ற திருவுலாக் காட்சிக்குத் தெய்வ யானையாரைத் திருமணஞ் செய்து வருகின்ற முருகக் கடவுளின் திருவுலாச் சிறப்பினையே ஒப்புமை கூறலாம்.

இங்ஙனம் நகர் வலம் வந்த உக்கிர குமாரர் தம் தேவியோடு இம்மையே நன்மை நல்கும் இறைவரையும், சோமசுந்தரக் கடவுளை யும், மீனாட்சியம்மையாரையும் வணங்கி மீண்டும் அரண்மனையை அடைந்து தாய்தந்தையர் இருவரையும் முறைப்படி வணங்கினார். சுந்தரபாண்டியர், திருமணத்தின் பொருட்டு வந்திருந்தவர் யாவரை யும் அறுவகைச் சுவையுடன் கூடிய அமுது செய்வித்து முறைப்படி பல வரிசைகள் வழங்கி விடை நல்கியருளினார்; பிறகு தேவர்களுக்கும் விடையளித்து ஆட்சிபுரிந்து வரலானார்.[1]

### உக்கிர குமாரர்க்கு வேல், வளை, செண்டு அளித்தல்

ஒருநாள் சுந்தர பாண்டியர் தம் புதல்வனை அழைத்து, "மைந்தனே! இந்திரனும் கடலரசனும் உனக்குப் பெரும் பகைவராவர்; அழகிய மேரு மலை செருக்குற்று நிற்கும்; ஆதலால், இந்திரனுடைய முடி சிதறும் வண்ணம் இந்த வளையினைக் கொண்டு எறிவாயாக; கடல் சுவறும் வண்ணம் இந்த வேலை விடுக; மேருவினைச் செருக்கு ஒழியும் வண்ணம் இந்தச் செண்டினால் அடிப்பாயாக" என்று கூறி அம் மூன்று படைக்கலங்களையும் எடுத்துக் கொடுத்தருளினார். அப்போது உக்கிர குமாரர் தம் தந்தையாரைத் தொழுது அம்மூன்று படைக் கலங்களையும் கையில் பெற்றுக்கொண்டார். அதன் பிறகு, சுந்தர

---

1. இங்குச் சுந்தர பாண்டியராகிய இறைவர் ஆட்சிபுரிந்து வந்ததால் மதுரைமா நகரம் சிவலோகமாகவும், சிவராசதானி யாகவும் விளங்கியது. இதனை, "அப்பாண்டி நாட்டைச் சிவலோ கம் ஆக்குவித்த, அப்பார் சடையப்பன்" (திருவாசகம்–திருவம்மானை) எனவும், "தென்னன் பாண்டி நாடு சிவலோக மானதன்றே" (திரு வாலவாயுடையார் திருவிளையாடற் புராணம்) எனவும் வரும் அடி களால் அறியலாம்.

பாண்டியர் ஆண் சிங்கம்போன்று எதிரே நிற்கும் தம் புதல்வனை, உக்கிர பாண்டிய மன்னன் என்று கூறும்படி வேதங்கள் முழங்கவும், பல்லியங்கள் ஒலிக்கவும் முடிசூட்டித் தம்முடைய ஆணையையும் அரசு உரிமையையும் செங்கோலையும் அவனுக்குக் கொடுத்தருளி, சுமதி என்னும் அமைச்சரையும், நீதி நூலாராய்ச்சியில் வல்ல அறிஞரையும் நோக்கி, '' இவ்வுக்கிர வழுதியைக் கண்ணின் இமைபோலவும், அறிவினைக் கொடுக்கும் கல்வி போலவும் நீங்கள் காக்கக் கடவீர்; இஃது உங்கள் கடமையாகும்; இந்நிலவுலகின் ஆட்சி இவனுடையதே '' என்று கூறி ஓம்படை அளித்து, உக்கிர வழுதியைத் தனியாக நோக்கி, '' ஐயனே ! யாம் நெடுங்காலம் இவ்வுலகினைத் தாங்கி ஆட்சி புரிந்தனம்; இனி, நீயும் இக்குற்றமற்ற உள்ளத்தினையுடையார் சொல்லும் வாய்மை வழியே ஒழுகிச் செங்கோல் செலுத்தி ஆண்டு செல்வத்தோடு விளங்குக '' என்று வாழ்த்தியருளினர்.

### மீனாட்சியும் சுந்தரபாண்டியரும் ஆலயத்துள் எழுந்தருளுதல்

அப்பொழுது, சிவ கணங்களெல்லாம் முன்னைய வடிவங்களை அடைய, தமது இச்சையாலே அருளுருவங் கொண்ட சுந்தர பாண்டியனாகிய இறைவர் தடாதகைப் பிராட்டியோடும் திருக்கோயிலினுள் சென்று எழுந்தருளியிருந்தார். பிறகு உக்கிர குமார பாண்டியன் நான்மறைகளில் கூறிய அறங்கள் வளருமாறு நிலவுலகை ஆட்சி புரிந்துகொண்டிருந்தான்.

செய்யுள்—66

ஆகச் செய்யுள்—1032

## 13. கடல்சுவற வேல்விட்ட படலம்

### உக்கிரவழுதியாரிடம் இந்திரன் பொறாமை கொள்ளுதல்

உக்கிரபாண்டியன் புவிமுழுதும் சந்திரன்போல வெண்குடை நிழற்ற அரசு புரிந்துவரும் நாளிலே, அளவில்லாத பேரறங்களையும் வேள்விகளையும் தேவர்கள் போற்றும்படி செய்துவந்தான். அசுவமேதம் தொண்ணூற்றுறு செய்து முடித்தவிடத்து வச்சிரப்படையினையுடைய இந்திரனானவன் உக்கிரவழுதியின்மேல் பொறாமைகொண்டு கோபித்து எழுந்தான்; '' இத்தனை வேள்விகளை இவன் செய்வதற்குக் காரணம் பொன்னாடுபோலத் திகழும் பாண்டியநாட்டில் மழை வளம் மிகுந்துள்ளதேயாகும்'' என்று கருதி ஒரு சூழ்ச்சி புரிய எண்ணினான்; உடனே கடல் வேந்தனாகிய வருணனை அழைத்து, ''நீ ஊழிக்காலத்திலே ஏழுலகங்களையும் ஒருசேர அழிக்கும் கடலைப்போன்று சினந்து சென்று காவல் மிக்க மதுரையை வளைந்து அழிப்பாயாக'' என்று கூறினான்.

### கடல் பொங்கி மதுரையை அடைதல்

அதுகேட்ட கடல் மன்னன் தனக்கு மேல்விளைவதை அறியாமை யால் அவ்வாறே செய்யத் துணிந்து, பேயும் கண்ணுறங்கும் நள்ளிர வின்கண் வளம் பொருந்திய [1] மதுரைப் பதியை விரைந்து சூழ்ந்து அழிக்கக் கருதினன். பொங்கிய கடலானது தனது அலைகளாகிய கைகள் அண்டகூடமெங்கும் ஊடுருவிச் சென்று நடுக்கமுண்டாக்கிவர, ஊழிக்காலத்தில் ஆரவாரித்து அழிக்கும் பெருவெள்ளமாய்ச் சந்திர மண்டலத்தை முட்டி எழுந்துவருகின்ற ஒரு கரிய மலை தோன்றினாற் போல, மண்ணுலகத்தாரும் விண்ணுலகத்தாரும் அஞ்சுமாறு வந்தது. மாடங்களையுடைய மதுரைப் பதியின்மீது கடல் வெள்ளமானது வரும் காட்சியானது, நஞ்சு பொருந்திய வாயினையும், கரிய உடலையும், கொடிய கண்களையும் கொண்ட இராகு என்னும் பாம்பு விரைந்து சென்று திங்களை விழுங்கவருதலை ஒத்திருந்தது; ஏழுமேகங்களும் மதுரையை மறைத்தற்கு வருதலையும் ஒக்கும், கடலினுள்ள வட்ட வடிவமான ஆமைகள் கேடகங்கள்போல் விளங்கின. வாளை மீன்கள் வாள்களை ஒத்திருந்தன. சுறு மீன்கள் யானைகளைப்போல் விளங்கின. அலைக்கூட்டங்கள் தாவிச் செல்லும் குதிரைகளைப்போன்றிருந்தன. ஓடவிட்ட தோணிகள் தேர்களைப்போல் திகழ்ந்தன. இவ்வாறாகிய பல்வகைச் சேனைகளுடன் கடலானது உக்கிரவழுதியின்மேல் படை யெடுத்து வந்த பகைவன்போன்றிருந்தது.

வட்ட யாமை பலகை; வீசு வாளை வாள்கள்; மகரமே
பட்ட யானை; பாய்தி ரைப்ப ரப்பு வாம்ப ரித்திரள்
விட்ட தோணி இரதம்; இன்ன விரவு தானை யொடுகடல்
அட்ட மாக வழுதி மேல மர்க்கு எழுந்த தொக்குமே.

### உக்கிரவழுதியாரின் கனவு

இவ்வாறு எழுந்த கடலானது முகில்கள் உறங்கும் மதில் சூழ்ந்த மதுரையின் கிழக்குத் திக்கில் வந்து நெருங்கும்பொழுது நள்ளிரவு ஆகும். அப்போது உக்கிரகுமாரன் உறங்கிக் கொண்டிருந்தான். அவன் கனவில் வெள்ளியம்பலவாணர் ஒரு சித்தமூர்த்தி வடிவு கொண்டு தோன்றி, ''பாண்டியனே! உனது நகரத்தை அழிக்கும் பொருட்டுக் கடல் பெருகி வருகின்றது; ஆதலால், நீ விரைந்து போய் உன் வேற்படையை எறிந்து வெற்றி பெறுவாயாக'' என்று கூறியருளினர். உடனே உக்கிர பாண்டியன் கைகளிரண்டும் சிரசின்

---

1. இம்மதுரை பழமதுரை என்பர்.

மேல் குவிய நாத்துதிக்க விழித்தெழுந்து நள்ளிரவில் தான் கண்ட கனவினை உணர்ந்து, சயனத்தினின்றும் நீங்கி அரண்மனை வாயில் பல வற்றையும் கடந்து, அமைச்சர்களோடு விரைந்து சென்று, நிலவுலகு அழிந்ததென்று கூறுமாறு பேரொலியோடு வருகின்ற கடலினைக்கண்டு அளவிறந்த வியப்படைந்து நின்றான், அப்போது, கனவில் தோன்றி யருளிய சித்த மூர்த்தி, நனவிலும் எழுந்தருளி வந்து, ''அப்பனே! நீ காலந் தாழ்த்து நிற்பது என்னை? கடல் வடிவமாக வந்த பகையை அதனது வலிகெடும் வண்ணம் கூரிய வேற் படையை எறிந்து வென்று உலகிற்கு வரும் அழிவை நீக்குவாயாக'' என்று கூறியருளினார்.

### உக்கிரவழுதி கடலின்மேல் வேற்படையை எறிதல்

உடனே, உக்கிரபாண்டியன் வேற்படையை எடுத்து வலமாகச் சுழற்றிக் கடலின்மேல் எறிந்தான். அவ்வேலின் நுனி கடலைத்தொட்ட அளவிலே கடல் சுஃறென்னும் ஒலியுண்டாக நீர் வற்றி மிக்க வலி இழந்து, வெற்றிமாலை குன்றித் தோல்வியுற்று அடிவணங்கும் பகைவரைப்போல், உக்கிரவழுதியின் கணைக்கால் அளவில் குறைந்துநின்றது.[1] வேத முறைப்படி இயற்றிய வேள்வியைத் தடுப்பதுடன் உலகனைத்தும் அழிக்கச் சூழ்ச்சிசெய்த இந்திரனின் ஏவலினால் பெருகி எழுந்துவந்த கடல் வலி இழந்தது. வஞ்சகருக்கு உதவிசெய்து, அதனால் வலிமையை இழப்பது எக்காலத்தும் இக்கடலின் செயலே போலும்[2].

---

1. இங்கே ''மற்றவன் தன்னால் வடவையின் கொழுந்துசுட்(டு), ஆற்று(து) உடலமும அமைக்குறு முத்தமும், விளர்த்துநின்(று) அணங்கி வளைக்குலம் முழங்கும் கருங்கடல் பொரிய ஒருங்கு வேல் விடுத்(து), அவற்கருள் கொடுத்த முதற்பெரு நாயகன்'' (கல்லாடம்) என்ற அடிகளையும், ''முந்நீர் விழவின் நெடியோன்'' (புறநானூறு-9) என்ற அடியையும், ''முந்நீர்க்கண் வடிம்பலம்ப நின்றானென்ற வியப் பால், நெடியோன் என்றார் என்ப'' (புறநானூறு – 9 உரை) என்ற உரைநடையினையும், ''அடியிற்றன்னளவரசர்க் குணர்த்தி, வடிவே லெறிந்த வான்பகை பொருது......கொடுங் கடல்கொள்ள,......தென் றிசை யாண்ட தென்னவன்'' (சிலப்பதிகாரம் - காடுகாண்காதை) என்ற அடிகளையும் நோக்குக.

பாண்டியன் கடலில் வேல் எறிந்தபோது அக்கடல் வடிந்து அவன் காலைக் கழுவியது; அதுபற்றி உக்கிர பாண்டியனுக்கு, 'வேலை வடிம் பலம்ப நின்றான்' என்ற பெயர் வழங்கலாயிற்று.

2. முன்பு கடல் சூரபன்மனுக்கு இடங்கொடுத்து முருகக்கடவுள் வேலால் வலிகெட்டு அழிந்ததும், விருத்திராசுரனுக்கு இடங் கொடுத்து அகத்தியர் ஆசமனத்தால் வலிகெட்டு அசந்ததும் இங்குக் குறிப்பிடுவதாகும்.

**இறைவன் பாண்டியனுக்குக் காட்சியளித்து மறைதல்**

அப்பொழுது உக்கிர பாண்டியன் முன் நின்றருளிய சித்தமூர்த்தி மறைந்து, ஆகாயத்திலே உமாதேவியோடும் இடப வாகனத்தில் வெளிப்பட்டு நின்றருளினர். மூன்று கண்களும், நான்கு தோள்களும், இளம்பிறை அணிந்த சடைமுடியும், நீலகண்டமுமாகக் காட்சி தந்தருளிய பெருமானை உக்கிரபாண்டியன் பேரன்போடு தரிசித்து அடியற்ற மரம்போலப் பூமியில் வீழ்ந்து வணங்கி எழுந்து அஞ்சலி செய்து துதித்த வண்ணம் பூமியின்மேல் நடந்து சென்ருன், பஞ்ச துந்துபிகள் ஒலிக்க, சிவகணங்கள் வணங்கிச் சூழ்ந்துவர, தேவர்கள் துதிக்க, [1] போக்கும் வரவும் அற்ற பெரு வள்ளலாகிய இறைவன் விண் வழியாகத் தமது திருக்கோயிலினுட் புகுந்தருளினர். அஞ்சலி கூப்பிய வாறு தொடர்ந்து அருகிலேவந்த பாண்டியன் திருக்கோயிலை அடைந்து இறைவனை வணங்கி அவரிடம் விடைபெற்றுக்கொண்டு. மீண்டு, மகளிர் அட்ட மங்கலங்களையும் ஏந்தி எதிர்நோக்கி வரத் தன் மாளிகையை அடைந்தான்.

**உக்கிரபாண்டியன் கடவுளுக்கு நிலம் வழங்கி அரசாளுதல்**

பின்னர் உக்கிரபாண்டியன் மதுரை நகருக்கும் கடலுக்கும் நடுவிலுள்ள விளை நிலங்களும் ஊர்களுமாகிய எல்லாவற்றையும் வெள்ளியம்பலத்துள் ஆடும் கொன்றை வேணிப்பெருமானுக்கே உரிமையாக்கி உலகங்களுக்கெல்லாம் பற்றுக்கோடாகி வீற்றிருந்தான்,

செய்யுள் — 20
ஆகச் செய்யுள் — 1052

## 14. இந்திரன் முடிமேல் வளையெறிந்த படலம்

**பாண்டிநாடு மழையின்றி வருந்துதல்**

உக்கிரபாண்டியன், செங்கோல் நடாத்தி வருங்காலத்தில் கோள் நிலை பிறழ்ந்தமையால் மேகங்கள் மழை பெய்யா தொழிந்தன; பயிர்கள் தீய்ந்தன; புல்லின் தலைகள் கருகின; தமிழ் நாடாகிய சேர சோழ பாண்டிய நாடுகள் மூன்றும் வறுமையில் வாடி வருந்தின.

**மூவேந்தரும் அகத்தியரை அடைதல்**

அதுகண்ட சேர சோழ பாண்டியரென்னும் தண்டமிழ்நாட்டு மூவேந்தரும் தத்தம் நாட்டின் வறுமையை ஒழிக்கக் கருதி அகத்திய முனிவரின் இருப்பிடமாகிய பொதிய மலையை அடைந்தனர். மூவேந்தரும் அகத்திய முனிவரைக் கண்டு தங்கள் நாட்டிலே மழையின்மை

---

1. இங்கு, ''போக்கும் வரவும் புணர்வுமிலாப் புண்ணியனே', (திருவாசகம் - சிவபுராணம்) என்ற அடி சிந்திக்கற்பாலது.

யால் வறுமை மிக்கதை எடுத்துக் கூறினர். அதுகேட்ட அகத்திய முனிவர் கிரகங்கள் நிற்கும் நிலையை ஆராய்ந்து அம்மூவரையும் நோக்கி, "அரசர்களே! இனியும் மழை பெய்தல் இல்லை; ஏனெனில் சூரியன் செவ்வாய்க்கு முன்னே செல்ல, சுக்கிரன் இவர்கள் பின் செல்வதனுல் உலகில் பன்னிரண்டு ஆண்டுகள் மழை பெய்யாது என்று நூல்கள் கூறின; ஆதலின், நீங்கள் மழையைப் பெய்விப்போனுகிய இந்திரனிடத்தே சென்று இதனைக் கேளுங்கள்" என்ருர். தமிழ்வேந்தர் மூவரும் அகத்திய முனிவரை நோக்கி, "யாம் இந்திரனைக்காண வானுலகத்திற்கு எங்ஙனம் செல்வோம்" என்று வினவினர். அதற்கு ஐம்பொறிகளையும் வென்ற குறுமுனிவர், "நீர் **சோமவார விரதம்** அனுட்டித்து, வெள்ளியம்பலவாணனின் திருவருளைப் பெற்றுக் கொண்டு விண்வழியே செல்வீராக" என்று கூறிச் சோமவார விரதம் நோற்கும் முறையினைக் கூறத் தொடங்கினர்.

**சோமவார விரதம்**

உத்தம தேவர்களுள்ளே உத்தமர் சிவபெருமான் ஆவர். உத்தம சத்திகளுள்ளே உத்தமி உமாதேவியார் ஆவர். உத்தம விரதங்களுள்ளே உத்தமம் **சோம வார (திங்கட்கிழமை) விரதம்** ஆகும் என்று வேத முதலிய நூல்கள் கூறுநிற்கும்.

உத்தம வானேர் தம்முள் உத்தமன் ஆகும் ஈசன்
உத்தம சத்தி மாருள் உத்தமி உருத்தி ராணி
உத்தம விரதந் தம்முள் உத்தமந் திங்கள் நோன்பென்(று)
உத்தம மறைநூ லாதி உரைக்கும் இச் **சோம வாரம்.**

இத்துணை பெருஞ் சிறப்பினதாகிய சோமவார விரதத்தை மேருமந்தரம் காசி முதலிய திருப்பதிகளிலிருந்து அனுட்டித்தலால் வரும் பயனைக் காட்டிலும். மதுரைப் பதியிலிருந்து அனுட்டித்தலால் வரும் பயன் கோடி மடங்கு அதிகமாகும். அதற்குக் காரணம் சோம வாரம் சோமந்தரக் கடவுளுக்குரிய நாளாகும். சிவபெருமான் உமையோடு கூடுவதால் **சோமன்** என்று அழைக்கப் பெறுவர். சோமருக்கு உரிய வாரம் ஆதலால் **சோமவாரம்** எனப்படும். இது பற்றியே சோம சுந்தரக்கடவுள் எழுந்தருளியிருக்கும் மதுரையிலிருந்துஇவ்விரதத்தினை நோற்றல் விசேடம் எனப்பட்டது. இன்னும் சூரியனும் சந்திரனும் ஒன்று கூடும் **அமாவாசையோடு வரும் சோமவாரம்**[1] மிக மிக விசேடமாம். பாவத்திற்கு அஞ்சி நீதிநெறியின் நின்றும் தேடிய பொருளைக் கொண்டு இயற்றும் சோமவார விரதப் பயன் ஒன்று பலவாகப் பெருகும்.

---

1. சோமவாரத்திலே உதயந் தொடங்கி இரவிலே கடையாமம் வரையிலும் அமாவாசை இருப்பின், அது மூன்றுகோடி சிவராத்திரியோடு ஒக்கும்; கடையாமத்தில் அரைநாழிகை இருப்பினும் நன்ரும்.

# திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் திருமுறை வெளியீடுகள்

| | | | |
|---|---|---|---|
| 1 | ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத்திரட்டு டாக்டர் உ. வே. சா. குறிப்புரையுடன் (புதிய பதிப்பு) | ... 3 | 50 |
| 2 | ஸ்ரீகுமரகுருபரசுவாமிகள்அருளிச்செய்த காசிக்கலம்பகம் மூலமும் அரும்பதக்குறிப்பும் | ... 0 | 40 |
| 3 | ,, சிதம்பர மும்மணிக்கோவை ,, | ... 0 | 20 |
| 4 | ,, மதுரைக்கலம்பகம் ,, | ... 0 | 40 |
| 5 | ,, மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் ,, | ... 0 | 60 |
| 6 | திருச்செந்தூர்க் கந்தர்கலி வெண்பா - மதுரை மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ் - மதுரைக் கலம் பகம் - நீதிநெறி விளக்கம் - மதுரை மீனாட்சி யம்மை இரட்டைமணிமாலை - மதுரை மீனாட்சி யம்மை குறம் | ... 2 | 70 |
| 7 | திருவாரூர் நான்மணிமாலை-முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ் | ... 1 | 25 |
| 8 | திருவாரூர் நான்மணிமாலை உரையுடன் | ... 0 | 50 |
| 9 | சிதம்பர மும்மணிக்கோவை - சிதம்பரச் செய்யுட் கோவை-தில்லைச் சிவகாமியம்மை இரட்டைமணிமாலை | ... 1 | 00 |
| 10 | பண்டார மும்மணிக்கோவை - காசிக்கலம்பகம் சகலகலாவல்லி மாலை | ... 1 | 00 |
| 11 | நீதிநெறி விளக்கம் ஆங்கிலமும், ஹிந்தியும் | ... 0 | 50 |
| 12 | நீதிநெறி விளக்கமும் நன்னெறியும் — மூலம் | ... 0 | 15 |
| 13 | கந்தர்கலிவெண்பா மூலம் மட்டும் | ... 0 | 10 |
| 14 | கந்தர்கலிவெண்பா (புதிய பதிப்பு) | ... 0 | 05 |
| 15 | அபிராமியந்தாதி மூலமும் பொழிப்புரையும் | ... 0 | 25 |
| 16 | திருஞானசம்பந்த சுவாமிகள் தேவாரம் (புதிய பதிப்பு) | ... 5 | 25 |
| 17 | திருநாவுக்கரசுசுவாமிகள் தேவாரம் ,, (தலமுறை) | ... 5 | 00 |
| 18 | சுந்தரர் தேவாரம் (புதிய பதிப்பு) | ... 2 | 75 |
| 19 | திருவாசகம் மூலம் (புதிய பதிப்பு) | ... 1 | 65 |
| 20 | திருக்கோவையார் பேராசிரியருரையும் பழையவுரையும் | ... 4 | 50 |
| 21 | 9-ம் திருமுறை-திருவிசைப்பா திருப்பல்லாண்டு மூலம் | ... 0 | 50 |
| 22 | ,, ,, தெளிவுரையுடன் | ... 3 | 25 |
| 23 | பெரிய புராணம் (மூலம்) புதிய பதிப்பு | ... 6 | 75 |
| 24 | பதினோராந் திருமுறை (புதிய பதிப்பு) | ... 3 | 50 |
| 25 | [illegible]ராயிரப் பனுவல்கள் | ... 0 | 10 |
| 26 | [illegible] தொண்டர் புராணசாரம் | ... 0 | 40 |
| 27 | அ[illegible]மையார் அற்புதத் திருவந்தாதி | ... 0 | 25 |
| 28 | குமரகுருபரசுவாமிகள் அருளிய நீதிநெறி விளக்கம் (வித்துவான் பட்டுச்சாமி ஓதுவார் உரையுடன்) | ... 1 | 50 |
| 29 | திருக்கயிலைத் திருமுறை | ... 0 | 35 |
| 30 | பழமொழித் திருமுறை | ... 0 | 25 |
| 31 | அப்பர்விழா வெளியீடு | ... 0 | 25 |
| 32 | Hymns and Proverbs | ... 0 | 30 |
| 33 | திருவாரூர் - திருப்பனுவல்கள் | ... 0 | 10 |
| 34 | குமரகுருபரர் வரலாறும்; அற்புதத்தேவாரத் திரட்டும் | ... 0 | 30 |
| 35 | கந்தபுராணச் சுருக்கம் (மூலம் மட்டும்) | ... 1 | 75 |
| 36 | திருவாசகம் தேனும் கனியும் | ... 0 | 15 |

37 தேவாரம் பாடும்பயன் ... 0 15
38 காசிக்கலம்பகம் உரைநடை ... 0 15
39 தாழைத் திருமுறை ... 0 15
40 ஐந்து நீதி நூல்கள் ... 0 10
41 ஆறு நீதி நூல்கள் ... 0 10
42 நவக்கிரகமாண்பு ... 0 25
43 ஸ்ரீ சைலம் ... 0 10
44 திருவுசாத்தனக் கல்லெழுத்துக்கள் ... 0 30
45 செந்திலாண்டவன் மகிமை ... 0 15
46 கந்தர்கலிவெண்பா (பட்டுச்சாமி ஓதுவார் தெளிவுரை
மற்றும் ஆராய்ச்சிக் குறிப்புரையுடன்) ... 1 50
47 திருமுருகாற்றுப்படை ... 0 15
48 தேவார வைப்புத்தல விளக்கம் ... 0 15
49 திருக்குறள் மணக்குடவர் உரை (முப்பாலும் சேர்ந்தது)... 2 00
50 திருக்குறள் - அறத்துப்பால் - சிற்றுரை ... 0 20
51 முதுமொழிமேல்வைப்பு (குறிப்புரை) ... 0 60
52 திருக்குறள் அறத்துப்பால் மூலமும் குறிப்புரையும்
ஹிந்தி மொழிபெயர்ப்பும் ... 1 50
53 திருக்குறள் - பொருட்பால் ,, ... 2 50
54 திருக்குறள் - காமத்துப்பால் ,,
ஷை 52, 53, 54. திருக்குறள் 3 புத்தகமும் ... 4 00
55 கந்தர்கலிவெண்பா சகலகலாவல்லிமாலை ஆங்கிலம் ... 1 50
56 திருவருட்பயன்மூலம் இந்தி, ஆங்கிலமொழிபெயர்ப்புடன் 1 00
57 சிவகொழுந்து தேசிகர் பிரபந்தம் ... 3 00
58 அகத்தியர் தேவாரத்திரட்டு (புதிய பதிப்பு) ... 0 50
59 மங்கலம் ... 0 20
60 திருஆனைத் திருமுறையும் உருத்திராக்க விதானமும் ... 0 20
61 கோதனத் திருமுறை .. 0 15
62 தோடுடைய செவியன் கோவண ஆடையன் ... 0 15
63 பண்டார மும்மணிக்கோவை உரைநடை ... 0 15
64 மகேசுவரபூசை ... 0 15
65 திருமந்திரம் (புதிய பதிப்பு) ... 6 00
66 திருவிசைப்பா தேனும் கனியும் ... 0 10

மேலே கண்ட நூல்கள் கிடைக்குமிடம் :

சந்த
விரா

ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் கலைக்கோயில்,
ஸ்ரீவைகுண்டம், திருநெல்வேலி மாவட்டம்

ஸ்ரீ காசி மடத்திற்காக வெளியிட்டவரும் ஆசிரியரும் ம. வே. பசுபதி.
திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் ஸ்ரீ குமரகுருபரர் அச்சகத்தில்
அச்சிட்டவர் முத்து. மெய்கண்டதேவன்
முகவரி:— ஸ்ரீ காசி மடம், திருப்பனந்தாள் - Pin 612 504.